# கன்னியின் குழந்தை.

(கதை - வசனம் - பாடல்)

ஆசிரியர் :

வித்வான் அ. மதிவாணர்,

பொள்ளாச்சி.



[ Copy rights Registered.
Regd. No. L. 507/60 Dated 8—2—1960.



**"MAICO" (Regd.)**

(STORY-BOOKS PUBLISHERS)

12, Park Road,

POLLACHI.

(Coimbatore Dist.)

அச்சிட்டோர் :

இம்பீரியல் பிரஸ், உடுமலைப்பேட்டை.

# முன்னுரை.

தமிழ் சினிமா உலகில் புராணக் கதைகளும், மாந்திரீகக் கதைகளும், சரித்திரக் கதைகள் என்ற போர்வையில் ராஜா ராணி கதைகளும் ஆதிக்கம் செலுத்திய காலம் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி. ஜாதி வெறியை நீக்கவும், உயர்வு தாழ்வை அகற்றவும், மூட நம்பிக்கைகளை ஒழிக்கவும், முயற்சி மேற்கொள்ளப்பட்டு, சமூகக் கதைகள் சினிமா உலகில் நுழைந்த காலம் இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி. அவற்றுக்கு நல்ல வரவேற்பும் இருந்தது. பல லட்சங்கள் செலவில் தயாரிக்கப்பட்ட புராணக் கதையை சொற்ப செலவில் தயாரான சமூகக் கதை வென்று, வெற்றிக்கொடி நாட்டியதைக் கண்டோம்.

தமிழ் சினிமாக்களை மூன்றுகாலப் பகுதிகளாகப் பிரிக்கலாம் :—

கடந்தகாலப் பகுதி :- புராணக்கதைப் படங்களின் காலம்.

நிகழ்காலப் பகுதி :- சமூகக் கதைப் படங்களின் காலம்.

வருங்காலப் பகுதி :- சமூக விஞ்ஞானக் கதைப் படங்களின் காலம்.

சென்ற காலம் கர்நாடக சங்கீதமும், சங்கீத வித்வான்களும் சினிமா உலகை முற்றுகையிட்டிருந்த காலம். தற்காலமோ பழைய தமிழிசைப் பாடல்களும், எளிய நாடோடிப் பாடல்களும் நுழைந்து பொதுமக்களின் வரவேற்பையும், பாராட்டையும் பெற்றிருக்கும் காலம்.

தற்காலத் தமிழ்ப் படங்களில் சிறிது முன்னேற்றம் காணப்படுகின்றபோதிலும், இன்னும் அதிக சீர்திருத்தம் அடைய வேண்டும். 30-வயதுக்கு மேற்பட்ட, முற்றி முதிர்ந்த நடிகர்கள் தங்களது பருத்த உடலும், தொந்தியுங்கொண்டு இளங்காதலர்கள் பாத்திரத்தைத் தாங்கிக் காதல் காட்சிகளில் நடிக்கும்போது பார்ப்பதற்குப் பரிதாபமாகவும், அருவருப்பாகவும் இருக்கிறது. எதிர்காலத்தில் புதுமுகங்கள் தோன்றி இந்த உடல் பருத்த

சரீரங்களை வெளியேற்றும் நாள் சீக்கிரம் வந்தாகவேண்டும். "மிண்டனுக்கு ரெண்டாள்" என்பது பழமொழி! வாட்போரில் கதாநாயகன தன்முன் நிற்பவர்களைத் தாக்கிக்கொண்டிருக்கும் போது சுற்றிலும் இருப்பவர்கள் அவன் தங்கள் பக்கம் திரும்பும் வரை வாளை ஓங்கிக்கொண்டு காத்திருப்பதும், கதாநாயகன் என்ற காரணத்தால் ஒருவன் எண்ணற்ற பேர்களை வென்றுவிட்டு ஓடச் செய்வதும், மனித சக்திக்கு அப்பாற்பட்ட காரியங்களைச் சாதிப்பதுபோலக் காட்சிகள் எடுப்பதும் பொருத்தமற்ற செயல்கள். புராணப் படங்களிலும், மாந்திரீகப் படங்களிலும் காணப் படவேண்டிய இக்காட்சிகளைச் சமூகப் படங்களில் கொண்டு வரும் வழக்கம் ஒழியவேண்டும். பாமர ஜனங்களை நம்பவைத்து காசு பறிக்கும் சூழ்ச்சிகள்தான் இவை என்றும், இதனால் கலை கொலையாகிறது என்றும் யாரும் கண்டிக்க முன்வருவதாகத் தெரியவில்லை. எதிர்காலத்தில் தமிழ்ப் படங்கள் அறிவுக்கும், இயற்கைக்கும் பொருந்தியவகையில் சமூகச் சித்திரங்களாக விளங்கவேண்டும். அக்காலம் மிகச் சமீபத்தில் வந்துகொண்டிருக்கிறது.

இயற்கைக்கு அப்பாற்பட்ட சம்பவங்களை விலக்கி விட்டு, காதல் கரடு முரடானது என்ற உண்மையையும், விதவா மணங்கள் பெருகவேண்டுமென்ற தத்துவத்தையும், இனிய எளிய பாடல்களையும் தன்னிடத்தே கொண்டுள்ள "கன்னியின் குழந்தை" என்னும் இந்தக் கதை, வசனம், பாடல் நூலை முத்தமிழ்த் தாயின் பாதங்களில் காணிக்கையாக வைக்கிறேன். கலைஞர்களும், சினிமா உலக வேந்தர்களும், பொதுமக்களும் இதற்கு ஆதரவு தருவார்களென்று நம்புகிறேன்.

குறிப்பு:- இது நாடக நூலாதலால் தூயதமிழில் எழுதப்படாமல் தற்காலம் நடைமுறையில் வழங்கப்படும் பேச்சுத் தமிழில் எழுதப்பட்டிருக்கின்றது.

இங்ஙனம்,

பொள்ளாச்சி.
1960.

அ. மதிவாணன்
(ஆசிரியர்)

# கதா பாத்திரங்கள்.

| | |
|---|---|
| **நிர்மலா** | – கதாநாயகி (நர்மதா, மல்லிகா, புனைப்பெயர்கள்) |
| **ராஜன்** | – கதாநாயகன் |
| **கமலா, சரோஜா** | – நிர்மலாவின் தோழிகள் |
| **சந்திரன்** | – ராஜனின் தோழன் |
| **சங்கரலிங்கம்** | – நிர்மலாவின் தந்தை |
| **சரஸ்வதி** | – நிர்மலாவின் சிற்றன்னை |
| **கோபால் பிள்ளை** | – ராஜனின் தந்தை |
| **மதுராம்பாள்** | – ராஜனின் தாய் |
| **பாலன்** | – வில்லன் |
| **கோபு, வீரப்பன்** | – பாலனின் தோழர் |
| **கந்தசாமி** | – போலிச் சாமியார் |
| **ஐம்புலிங்க நாடார்** | – சரஸ்வதியின் உறவினர் |
| **முத்தம்மாள்** | – ஐம்புலிங்கத்தின் முதல் மனைவி |
| **லீலா** | – ஐம்புலிங்கத்தின் தங்கை |
| **ராமாத்தாள்** | – சரஸ்வதியின் வேலைக்காரி |
| **பொன்னி** | – பூசாரியின் காதலி |
| **முருகன்** | – தோட்டக்காரன் |
| **லட்சுமி** | – தோட்டக்காரனின் மனைவி |
| **கமலம்** | – தாசி |
| **ராஜம், ராதா** | – அனாதைப் பெண்கள் |

( பூசாரி, சேட், அனாதைப் பெண்கள் விடுதியின் தலைவி மற்றும் பலர் )

# கன்னியின் குழந்தை.

## காட்சி – 1.

*[இடம்: மதுரை—சங்கரலிங்க நாடார் வீடு. சங்கரலிங்கத்தின் மகள் நிர்மலா சரஸ்வதியிடம் 'ட்யூஷன்' படிக்கிறாள்.]*

**சரஸ்வதி:** ஆசிரியத்தளை என்றால் என்ன?

**நிர்மலா:** ஆசிரியத்தளையா? ஆசிரியர் கூட்டந்தானே—அதாவது ஆசிரியரும் ஆசிரியரும் கூடி.........கூடி.........அப்புறம் என்ன டீச்சர்?

**சரஸ்:** ஊஹூம்!...அப்படியல்ல ஆசிரியம் தளை ஆசிரியத் தளை. அதாவது, ஆசிரியப்பாவில் வரும் தளை.

**நிர்:** தளை என்றால் என்ன டீச்சர்?

**சரஸ்:** தளை என்பதற்குக் "கட்டு" அல்லது "பிணைப்பு" என்று பொருள். மாடுகளின் கால்களுக்குத் தளையால் போடுகிறார்களே, நீ பார்த்ததில்லே?

**நிர்:** ஓ! பார்த்திருக்கிறேனே! சிலசமயம் தெருவிலே மாட்டுக்காரன் மாடுகளை ஓட்டிக்கொண்டு போகும்போது எருமைகளில் ஒவ்வொன்றுக்கு முன்னங்கால்கள் இரண்டிலும் கட்டுப் போட்டிருக்கும் – பாவம்! – அது நடக்க முடியாமல் – மெல்ல மெல்ல –

**சரஸ்:** நடந்து போகும் இல்லையா?...... ஆனால் நாம்படிப்பது அந்தத் தளையைப்பற்றியல்ல. யாப்பிலக்கணத்திலே—சீரும் சீரும் சேரும்போது இடையில் இருப்பது தளை எனப்படும். ஆனால் அது நம் கண்ணுக்குத் தெரியாது,

**நிர்:** கண்ணுக்குத் தெரியாதா? என்ன ஆச்சரியம்!

**சரஸ்:** இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. பூமாலை ஒன்றை எடுத்துக்கொள்வோம்.

நிர்: பூமாலையா டீச்சர்! அதோ! (அந்த அறையின் சுவற்றில் படத்திற்குப் போடப்பட்டிருந்த பூமாலையைச் சுட்டிக்காட்டி) அதை எடுத்து வரவா டீச்சர்!

சரஸ்: வேண்டாம். பூமாலை ஒன்று நம்கையில் இருப்பதாக நினைத்துக்கொள்வோம்.

நிர்: சரீங்க டீச்சர்!

சரஸ்: பூமாலையிலுள்ள பூக்களெல்லாம் ஒன்றோடொன்று கட்டப்பட்டிருக்கும். ஆனால் அந்தக் கட்டு அல்லது முடிச்சு, அல்லது தளை நம்முடைய கண்ணுக்குத் தெரிவதில்லை. உட்பக்கம் மறைந்திருக்கும்.

நிர்: ஆமாம் டீச்சர்! உள்ளே இருப்பது தெரிவதில்லை.

சரஸ்: பாமாலையிலுள்ள சீர்கள் பூமாலையில் உள்ள பூக்களைப் போல இரண்டும் ஒன்றாய்ச் சேரும் போது பந்தம் ஏற்படுகிறது.

நிர்: பந்தமா!......''பந்தம்'' என்றால் ''அன்பு'' என்று......

சரஸ்: அதுவும் சரிதான். இரண்டு உள்ளங்கள் ஒன்றாய்ச் சேரும்போது அன்பு தோன்றுகிறது. ''பந்தம்'' என்பதற்குத் தளை என்று சொல்லுவார்கள் – யாப்பிலக்கணத்தில். (சில வினாடிகள் மௌனம்)

நிர்: அப்புறம் டீச்சர்?

சரஸ்: அவ்வளவுதான். இப்போது புரிகிறதா, ஆசிரியத்தளை என்னவென்று?

நிர்: ஒருமாதிரி புரிகிறது டீச்சர்! போகப்போக நன்றாய்ப் புரிந்துகொள்வேன்.

சரஸ்: சரி! கணக்குப் பாடத்தை எடு.

நிர்: சரீங்க டீச்சர்! (கணக்குப் புத்தகத்தை எடுத்துக் கொடுக்கிறாள்)

சரஸ்: (புத்தகத்தைத் திறந்துகொண்டே) எந்த அத்தியாயம்?

நிர்: முதல் அத்தியாயம் முடிந்தது டீச்சர்! இனி இரண்டாவது அத்தியாயம் ஆரம்பிக்கவேண்டும்.

சரஸ்: சரி, ஆரம்பிப்போம். இரண்டாம் அத்தியாயத்தில் முதல் அப்பியாசம் கூட்டு வியாபாரம் பற்றியது. அதில் முதல் கணக்கைச் செய்வோம். படித்துப்பார் (புத்தகத்தைக் கொடுக்கிறாள்.)

**நிர் :** (கணக்கை மௌனமாகப் படிக்கிருள்) டீச்சர்! "ஒரு கம்பெனி திவலாகிவிடுகிறது" என்று போட்டிருக்கிறதே; அப்படீன்ன என்ன டீச்சர்?

**சரஸ் :** திவால் ஆகிவிடுவது என்பதற்கு நஷ்டமடைந்து கம்பெனியை மூடிவிடுவது என்பது பொருள்.

**நிர் :** திவால்! அது தமிழா டீச்சர்?

**சரஸ் :** இல்லை அது "உருது" மொழியாக இருக்கும்.

**நிர் :** நிச்சயமாகத் தெரியாதா?

**சரஸ் :** உருதுமொழிதான். (நிர்மலா மெதுவாகச் சிரிக்கிருள்) ஏன் சிரிக்கிருய்?

**நிர் :** ஒன்றுமில்லை டீச்சர். "கலப்பு மணம்" நினைவுக்கு வந்தது, சிரித்தேன்.

**சரஸ் :** கலப்பு மணமா!

**நிர் :** "கம்பெனி திவால் ஆனது" என்பதிலே மூன்று மொழிகள் கலந்து கொண்டன! அதனுல்தான் —

**சரஸ் :** ஓ! (மெதுவாகச் சிரிக்கிருள்) சரிசரி, நீ கணக்குப்போடு. கலப்பு மணத்தைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பதற்கு இது நேரம் அல்ல. முதலில் தேர்வில் வெற்றிபெற வேண்டும்.

**நிர் :** போங்க டீச்சர்! (முகம் நாணத்தால் சிவக்கிறது. சங்கரலிங்கம் உள்ளே வருகிருர்)

**சங்க :** நிர்மலா, உள்ளேபோய்க் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வாம்மா.

**நிர் :** ஆகட்டுமப்பா (எழுந்து போகிருள்)

**சங்க :** (சரஸ்வதியிடம் ஒரு கவரைக் கொடுத்து) இதில் "ட்யூஷன் பீசும்" ஒரு லெட்டரும் இருக்கிறது. (போய் விடுகிருர்) சரஸ்வதி கவரில் உள்ள கடிதத்தைப் படித்துப் பார்க்கிருள். ஆச்சரியமடைகிருள்.

**நிர் :** (தண்ணீர் டம்ளருடன் வருகிருள்) அப்பா எங்கே?

**சரஸ் :** உள்ளே இருக்கிருர். (எதிர் அறையைச் சுட்டிக் காட்டுகிருள்—நிர்மலா போனபின், கடிதத்தை மறுபடியும் படிக்கிருள். நிர்மலா திரும்பிவந்து உட்காருகிருள்) நிர்மலா!

மற்ற பாடங்களை நாளை பார்த்துக்கொள்ளலாம். நான் போகிறேன். (எழுந்திருக்கிறள்)

நிர்: சரிங்க டீச்சர்! (எழுந்திருக்கிறள் – சரஸ்வதி வெளியே போகிறள். கையிலிருந்த கவரை ஜாக்கெட்டுக்குள் சொருகி வைக்கிறள்).

## காட்சி – 2.

[இடம்: சரஸ்வதியின் படுக்கையறை; நேரம்: இரவு மணி 11.
பாத்திரங்கள்: சரஸ்வதியும், சமயல்காரி ராமாத்தாளும்.]
சரஸ்வதி ஒரு கடிதத்தைத் துண்டு துண்டாகக் கிழிக்கிறள்.

**ராமாத்தாள்:** ஏனுங்கம்மா! மணி, பதினொண்ணு அடிச்சாச்சு! இன்னும் தூங்காமே இருக்கிறீங்களே!

**சரஸ்:** தூக்கம் வரலே......நாளைக்கு லீவுதானே!......

**ராமா:** லீவுங்களா! அதிருக்கட்டும் படிச்சுப்படிச்சுக் கிழிச்சுப் போட்றீங்களே! ஏனுங்கம்மா?

**சரஸ்:** அதுவா? ஒரு கணக்குப் போட்டுப் பார்க்றேன்...... சரியா வரமாட்டேங்குது......

**ராமா:** அதனலே படிச்சுக்கிழிக்கிறீங்களாக்கும்!

**சரஸ்:** ஆமாமா! நான் படிச்சுக்கிழிக்கிறேன். நீ பேசாமெ படுத்துத்தொலை. எனக்கு, எழுதவேண்டிய வேலை நிறைய இருக்கு. நீ வேறே பேச்சுக் கொடுத்தா – நான் எழுதி முடிச்ச மாதிரிதான்.

**ராமா:** நீங்க எழுதுங்கம்மா! நான் படுத்துக்றேன். (படுத்துக் கொள்ளுகிறள். சரஸ்வதி எழுதிக்கொண்டிருக்கிறள்.)

**சரஸ்:** (சற்று நேரம் பொறுத்து) ராமாத்தா! ராமாத்தா! (பதிலில்லை.)

தூங்கிட்டா போலே. (எழுந்து சென்று ராமாத்தாளுடைய முகத்தைப் பார்க்கிறள்–அவள் மெதுவாகக் குறட்டை விடுகிறள். சரஸ்வதி மறுபடியும் தனது நாற்காலியில் உட்கார்ந்துகொள்ளுகிறள்.) இந்தக் கடிதத்தை ஒரு தடவையாவது வாய்விட்டுப் படிக்க ஆசையா இருக்கு! இவள்

வேறெ கோட்டான் மாதிரி முழுச்சுகிட்டு...... (கடிதத்தை சத்தமாகப் படிக்கிறாள். ராமாத்தாள் நன்றாக விழித்துக் கொண்டு அதைக் கேட்டுக்கொண்டிருக்கிறாள்)

அன்புள்ள சரஸ்வதிக்கு,

இக் கடிதத்தைக் கண்டு திடுக்கிடுவாய் என்று நினைக்கிறேன். நாம் சிறு பிள்ளைகள் அல்ல. எனக்கு வயது 42. உனக்கு வயது 30 இருக்குமென்று நினைக்கிறேன். நான் தாரமிழந்தவன். நீயும் விதவை. நாம் இன்னும் பல ஆண்டுகள் இந்த உலகில் உயிர்வாழ வேண்டும். நாமிருவரும் படித்தவர்கள். ஆசிரியர்கள்.

நேற்று நர்மதாவுக்கு நீ நடத்திய தமிழிலக்கணப் பாடம் மிக நன்றாக இருந்தது. "ஆசிரியத்தளை" பற்றித் தான் குறிப்பிடுகிறேன். சிலகாலமாக என் மனதில் இருந்து வந்த எண்ணத்தை இக்கடிதத்தில் வெளிப்படுத்துகிறேன்.

பந்தம் பற்றிய விளக்கமும் கூட்டு வியாபாரக் கணக்கும் என் சிந்தனையை எழுத்தில் உருவாக்கின. திருமணம் என்ற பந்தத்தால் கூட்டு வியாபாரம் என்ற குடும்பத்தை நடத்திப் பார்த்தால் என்ன? என் கணக்கின்படி இலாபம் தான் விடை. உனது விடை என்ன? நாளை பதில் வேண்டும்.

இங்ஙனம்,

**ஆசிரியச்சீர்**

(சரஸ்வதி, மேலும் ஒரு கடிதத்தை எழுதிக் கிழித்தாள். அடுத்த கடிதத்தை எழுதி வாய்விட்டுப் படித்தாள். சமையற்காரி திருதிருவென்று விழித்துக்கொண்டு சரஸ்வதி படிப்பதைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.)

"அன்பரே!

உங்கள் கடிதத்தை எத்தனை முறை படித்தேன் என்பது தெரியவில்லை. கணக்கிற்கு நீங்கள் விடை கண்டுபிடித்ததாக எழுதியிருந்தீர்கள். இந்தக் கணக்கு என் மூளையைக் குழப்புகிறது. வெள்ளைக் காகிதங்கள் பலவற்றை எழுதி எழுதிக் கருப்புக் காகிதங்களாக மாற்றியதில் கிடைத்த மிச்சம் துண்டுக் காகிதங்கள் தான். இந்தக் கணக்கைப் போட்டு விடை காண என்றால் முடியவில்லை. உங்கள் விடையைக் காப்பியடிக்கலாமா என்று தோன்றுகிறது.

இங்ஙனம்,

**இரண்டாம் ஆசிரியச்சீர்.**

(கடிதத்தை ஒரு கவரில் போட்டு ஒட்டினுள். திடீரென்று சமயற்காரியின் பக்கம் திரும்பினுள். ஒரு துள்ளுத் துள்ளினுள்)

**சரஸ் :** என்னடீ ! நீ இன்னும் தூங்கலேயா ?

**ராமா :** தூக்கம் வரலேம்மா............சும்மா, அப்படியே முழுச்சுக்கிட்டு இருந்தேன். யாருக்கம்மா கடுதாசி எழுதறீங்க ?

**சரஸ் :** அதுவா !... உங்க பாட்டனுக்கு !...

## காட்சி – 3

[இடம் : திருமணப்பதிவு அதிகாரியின் அலுவலகம், மதுரை. பாத்திரங்கள் : சங்கரலிங்கம், சரஸ்வதி, நிர்மலா, பதிவு அதிகாரி, எழுத்தாளர்கள் (Clerks) மற்றும பல ஆண் பெண் நண்பர்கள்]

**அதிகாரி :** திருவாளர் சங்கரலிங்கம் அவர்களே ! உங்கள் அருகில் நிற்கும் சரஸ்வதி அவர்களை உங்கள் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொண்டு அவருடன் சேர்ந்து கணவனும் மனைவியுமாக வாழ்ந்துவர ஒப்புக்கொள்ளுகிறீரா ?

**சங்க :** ஒப்புக்கொள்ளுகிறேன்.

**அதிகாரி :** திருமதி சரஸ்வதி அவர்களே ! உங்கள் அருகில் நிற்கும் சங்கரலிங்கம் அவர்களை உங்கள் வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக்கொண்டு அவருடன் சேர்ந்து மனைவியும் கணவனுமாக வாழ்ந்துவர ஒப்புக்கொள்ளுகிறீரா ?

**சரஸ் :** ஒப்புக்கொள்ளுகிறேன்.

**அதிகாரி :** உங்கள் சம்மதத்திற்கு அறிகுறியாக இருவரும் வலது கைகளைப் பிடித்துக்கொள்ளுங்கள். (இருவரும் வலது கைகளைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்)

இந்த ரிஜிஸ்டரில் இருவரும் கையெழுத்துப்போடுங்கள். (இருவரும் கையெழுத்திடுகிறார்கள்.)

சாட்சிகள் இருவர் கையெழுத்துப்போடவேண்டும். (இருவர் கையெழுத்திடுகிறார்கள்)

(தன் மேஜையின்மீது வைக்கப்பட்டிருந்த தட்டிலிருந்த மாங்கல்யத்தை அதிகாரி எடுத்துக்கொடுக்க சங்கரலிங்கம் அதை வாங்கி சரஸ்வதியின் கழுத்தில் கட்டுகிறார்.)

உங்களுக்கு என் வாழ்த்துக்கள். இனி நீங்கள் போகலாம்.

(மணமக்கள் அதிகாரிக்கு வணக்கம் செலுத்திவிட்டு வெளியே போகிறார்கள்.)

## காட்சி — 4

[இடம்: கமலாவின் வீடு – சிற்றுண்டி விருந்து முடிகிறது.

பாத்திரங்கள்: கமலாவும், அவளது பள்ளித்தோழிகளும்.]

**விஜயா:** (எழுந்து நின்று) தோழிகளே! கமலா தனது பிறந்த நாளுக்காக நடத்திய சிற்றுண்டி விருந்தும் அதையொட்டி நடத்தப்பட்ட நிர்மலாவின் டான்சும் மிக நன்றாயிருந்தன. இதைப்போலவே ஒவ்வொரு ஆண்டும் கமலாவின் பிறந்த நாள் கொண்டாட்டத்தில் நாம் கலந்து கொள்ளவேண்டும் என்று நமக்கு ஆவலாய்த்தானிருக்கும். ஆனால்......

**பார்வதி:** "ஆனால்" – எதற்கு? ஒவ்வொரு ஆண்டும் நாம் கமலாவின் பிறந்த நாள் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளத்தான் போகிறோம்.

**விஜயா:** சந்தேகந்தான். நம்மில் சிலர் கலந்துகொள்வார்கள். பலர் மணமாகி புக்ககம் சென்றுவிடுவார்கள். நமக்கெல்லாம் மணப்பருவம் வந்துவிட்டதல்லவா? (எல்லோரும் சிரிக்கிறார்கள்).

**விமலா:** அப்படியானால் நாமெல்லாம் கூடிய சீக்கிரத்தில் விஜயாவின் திருமண விருந்தில் கலந்துகொள்ளலாம் (சிரிப்பு).

**விஜயா:** யார் கண்டது? அப்படியே நடந்தாலும் நடக்கலாம் (சிரிப்பு) தோழிகளே! கமலா நமக்கு நடத்திய விருந்துக்காக, உங்கள் சார்பாகவும் என் சார்பாகவும் அவளுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைக் கூறுகிறேன். கமலா தனது பிறந்த நாட்களை இன்னும் குறைந்தது 80 ஆண்டுகளாவது கொண்டாட வேண்டும். அவளுடைய பேரனின் பேரன் அவளைக் "கொள்ளுப் பாட்டி!" என்று கூப்பிட வேண்டும் (சிரிப்பு).

**கல்யாணி :** கமலாவிடம் நம் எல்லோருக்கும் இருக்கும் அன்பின் அறிகுறியாக இந்த "வெள்ளிக்கூஜா"வை நம் எல்லோரின் சார்பாக அவளுக்குக்கொடுக்கிறேன். (கமலாவிடம் கூஜாவைத் தருகிருள்).

**கமலா :** அன்புள்ள தோழிகளே! நீங்கள் என் அழைப்பினை ஏற்று இங்கு வந்து என்னைப் பெருமைப்படுத்தியதற்காக உங்களுக்கு என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். விமலா சொன்னதுபோல, நாமெல்லாரும் கூடிய சீக்கிரம் விஜயாவின் திருமணத்திற்கு விஜயம்செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். (சிரிப்பு) (ஒவ்வொருவரும் கமலாவிடம் விடைபெற்றுச் செல்லுகிருர்கள். கடைசியாக நிர்மலாவும் கமலாவின் முன்வந்து திற்கிருள்.) "நிர்மலா! நீயுமா புறப்பட்டுவிட்டாய்? அவசரமென்ன? இன்னும் கொஞ்சநேரம் பொறுத்துத்தான் நீ போகவேண்டும். வா! (கையைப்பிடித்து இழுத்துக்கொண்டு, பாடிக்கொண்டே, தனது அறைக்குப்போகிருள். இருவரும் நாற்காலிகளில் உட்காருகிருர்கள்).

**கமலா :** நான் மதராஸுக்குப் போகப்போறேண்டீ!

**நிர் :** உனக்குக்கல்யாணமா, என்ன?

**கமலா :** இல்லேடீ, இல்லே! படிக்கப்போறேன்.

**நிர் :** ஓ! காலேஜ்லே சேர்ந்து படிக்கவா?

**கமலா :** ஆமா. நீ காலேஜ்லே சேர்ந்து படிக்கமாட்டாயா?

**நிர் :** சந்தேகந்தாண்டி!

**கமலா :** ஏன்?

**நிர் :** பணம் வேண்டாமா கமலா? நீ பணக்காரி. காலேஜூம் படிக்கலாம். மேல்நாடு போய்க்கூடப் படிக்கலாம்

**கமலா :** ஒங்கப்பாவுக்கு நீ ஒரே பொண்ணுதானடி! படிக்க வச்சா என்னவாம்?

**நிர் :** என் அம்மா உயிரோடு இருந்திருந்தா, நானுந்தான் காலேஜில் படிப்பேன்.

**கமலா :** ஏண்டீ! உன் சித்தி கெட்டவளா?

**நிர் :** கெட்டவளோ, நல்லவளோ, எப்படியிருந்தா என்ன?

**கமலா :** உன் அப்பாவிடம் கேட்டுப்பாரேன்.

**நிர் :** கேட்டுத்தான் பார்த்தேன்.

**கமலா :** என்ன சொன்னார் ?

**நிர் :** 'பார்க்கலாம்'' — ''பணம் வேணுமே''ண்ணுசொன்னார்

**கமலா :** எப்படியாவது நீயும் வந்து சேர் நிர்மலா. இரண்டு பேரும் ஒரே காலேஜ்லே படிக்கலாம்.

**நிர் :** பார்க்கலாம் – நான் போய் வர்ரேண்டி.

**கமலா :** இன்னுங்கொஞ்சநேரம் இருந்துட்டுப்போயேன் !

**நிர் :** இல்லே கமலா ! நேரங்கழிச்சுப்போனா என் சித்தி திட்டு வாங்க. நான் வரட்டுமா ? (எழுந்திருக்கிறாள்)

## காட்சி — 5

[இடம் : திருமங்கலம் : ஐம்புலிங்க நாடார் வீடு.

**பாத்திரங்கள் :** ஐம்புலிங்கம், அவருடைய மூத்த மனைவி முத்தம்மாள்; சரஸ்வதி.]

**ஐம்பு :** முத்தா !

**முத்தம்மாள் :** இதோ வந்துட்டேன் (பக்கத்து அறையிலிருந்து வருகிறாள்).

**ஐம்பு :** முத்து ! சரஸ்வதிக்கு ஓவல் கொண்டுவந்து கொடேன். (முத்தம்மாள் போகிறாள்) ஏன் சரஸு அந்தப் பொண்ணு என்னைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதிப்பாளா ?

**சரஸ் :** அதைப்பற்றி உங்களுக்கு எதுக்கண்ணா கவலை? அதெல்லாம் நான் கவனிச்சுக்கிறேன். நீங்க பிரியப்பட்டுக் கேக்கும்போது......

**ஐம்பு :** சரஸு நீ மட்டும் இந்தக் காரியத்தைச் செய்துமுடிச்சா உனக்கு ஒரு வைர அட்டிகை வாங்கிக்கொடுப்பேன்.

**சரஸ் :** ஆகட்டுமண்ணா ! இந்தச் சரசுவதியுடைய சாமர்த்தியத்தைப்பற்றி இந்தக்காரியம் முடிஞ்சபிறகு நீங்களே தெரிஞ்சுக்குவீங்க.

**ஐம்பு :** சங்கரலிங்கம் இதுக்குச் சம்மதிப்பாரோ, என்னமோ ?

**சரஸ் :** அதெல்லாம் நான் கவனிச்சுக்கிறேன். (முத்தம்மாள் வந்து இருவருக்கும் ஓவல் கொடுக்கிருள். ஓவல் சாப்பிட்ட பின்–) நான் புறப்பட்றேனண்ணு.

**ஜம்பு :** புறப்பட்றயா? சரி! எப்பத் திரும்பி வருவே?

**சரஸ் :** சீக்கிரத்திலே வருவேன். இரண்டொரு நாளிலே. போய்வரட்டுமா அண்ணி?

**முத்தம்மாள் :** போய்ட்டு வாம்மா! (சரஸ்வதி போகிருள்) என்னுங்க விசயம்?

**ஜம்பு :** விசயம் என்ன? எல்லாம் பழைய விசயந்தான். இருக்ற சொத்தையெல்லாம் அநுபவிக்றதுக்கு ஒரு குழந்தை வேணுமே, ஒரு குழந்தை? நீயும் மலடு! அவளும் மலடு! இரண்டுதாரங் கல்யாணம் பண்ணியும் ஒரு குழந்தையுமில்லேண்ணு ஊரெல்லாங் கேலி செய்யறதெப் பார்த்தா உயிரெ விட்டுடலாமாண்ணு தோணுது. ஊம்! என்ன செய்றது? தலைவிதி!

**முத் :** (தன் கண்களில் தேங்கிநின்ற கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) மலடு மலடுன்னு சொல்லி என்னே ஏன் வதைக்கிறீங்க? நான்தான் பாபிண்ணு சொல்லி இரண்டாந் தாரம் கட்டிக்கச்சொன்னேன்...

**ஜம்பு :** அவளைக் கலியாணஞ்செய்து நாலு வருஷமாகுது. அவளுக்கும் கொழந்தெ பிறக்கலேயே!

**முத் :** அதுனலே மூணுங்கல்யாணம் செய்யப்போறீங்களாக்கும்?

**ஜம்பு :** ஏன்? பின்னெ என்ன செய்யறதாம். இத்தனெ சொத்தையும் சொகத்தையும் எவனெவனே அநுபவிக்கிறதுக்காக விட்டுட்டுச்சாக மனம் வல்லேயே!

**முத் :** மகராசரா, மூணும் தாரஞ் செய்துக்குங்கோ–நான் வேண்டாம்ணு சொல்றேன். எப்படியோ, வீட்டுக்குப் பேரு சொல்ல ஒரு கொழந்தேண்ணு இருந்தா.........

**ஜம்பு :** அதுக்காகத்தான் சரஸுகிட்டச் சொல்லிகிட்டிருந்தேன். பொண்ணு தயாரா இருக்றுப்லே இருக்கு.

**முத் :** பொண்ணு யாராம்?

**ஜம்பு :** பொண்ணு, அவ வீட்லயே இருக்கு. அவளுட மூத்தகுடி மகதான். வயசு 18 தாணும். பத்தாவது படிச்சிருக்ருளாம்.

**முத் :** பொண்ணுக்கு இஷ்டந்தானு? அவளுடைய அப்பா என்ன சொல்றாம்?

**ஜம்பு :** அதெல்லாம், தானே கவனிச்சுக்றேன்னு சரசு சொல்லிப் பிட்டா..

**முத் :** அப்படியா, சரி!

**ஜம்பு :** லட்சுமிகிட்டயும் இந்தச்சங்கதியெச் சொல்லி, அவளைச் சம்மதிக்க வைக்கவேண்டியது உன் கடமை. தெரியுதா?

**முத் :** பாவம்! குழந்தையில்லையேண்ணு அவளுக்குந்தான் மனசிலே கொள்ளை விசனம். என்ன செய்றது? அவளுந் தான் மூணுவருஷமா விநாயகர் கோயிலைச் சுற்றிவாரா. கொடுத்து வைக்கலையே!

## காட்சி — 6

[இடம் : சங்கரலிங்கம் வீடு –

**பாத்திரங்கள் :** சங்கரலிங்கம், சரசு, நிர்மலா]

**சரஸ் :** காலேஜ் படிக்கவைக்கக் குறைஞ்சது நாலாயிரமாவது வேண்டாமா?

**சங்க :** நாலாயிரம் செலவாகத்தான் செய்யும் ஆனு, பணத்துக்கு எங்கே போறது?

**சரஸ் :** ஏன்? கடன் வாங்குங்களேன்.

**சங்க :** எவன் கொடுக்கிறன் கடன்? அதுவும் என் மாதிரி பள்ளிக்கூட வாத்தியாருக்கு. அஞ்சு, பத்து கடன் கொடுக்க வே ஆளெக்காணும். ஆயிரக்கணக்கிலே எவன் கொடுக் றன்? எட்டாத பழத்துக்குக் கொட்டாவிவிட்டு என்னபலன்?

**சரஸ் :** அதுக்காகத்தான் சொன்னேன். அவளுக்குக் கல்யாணத்தைப் பண்ணிவச்சிடலாம்னு. வயசுப்பெண்ணெ வீட்டிலெ வச்சிருப்பது, நெருப்பெ மடியிலெ கட்டியிருக்ற மாதிரீண்ணு சொல்லுவாங்க. காலா காலத்திலே செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாமே விட்டுட்டா–பின்னலே–தலைமேலெ கையெவச்சிக்க வேண்டியதுதான். பேசாமெ ஜம்புலிங்கத்தண்ணனுக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுத்திடலாம்–பெரிய இடம்!

**சங்க :** ஐம்புலிங்கம் பிள்ளை சொத்துக்காரன்தான். ஆனு வயசு 50-55 இருக்குமே!

**சரஸ் :** அப்படியொண்ணும் அவ்வளவு வயசு இருக்காது. உங்களை நான் கல்யாணம் செய்யறபோது உங்களுக்கு வயசு என்ன இருபதா, இருபத்தஞ்சா? இருபத்தஞ்செத் திருப்பிப் போட்டுக்க வேண்டியதுதான்.

**சங்க :** அட நம்ம சங்கதி வேறெ. நீயும் நானும் விதவா விவாகம்தானே செய்துகிட்டோம்.

**சரஸ் :** ஏன், விதவா விவாகம்னா மட்டமா என்ன ?

**சங்க :** அப்படீன்னு நான் சொல்லலெ. அப்படிப்பட்ட எண்ணமும் எனக்கு இல்லெ. நிர்மலா சிறுபெண்ணுச்சேன்னு தான் பார்க்கிறேன்.

**சரஸ் :** சிறுபெண்! என்ன சிறுபெண்?. வயசு 18 ஆகுது. ஏதோ நல்ல இடமாக்கெடைக்குதே — பணக்கரியாப் பிழைச்சுக்கு வாளேன்னுதான் சொன்னேன். எனக்கென்ன? உங்கபாடு உங்க மகபாடு! நான் அன்னியந்தானே!

**சங்க :** அப்படியில்லெ சரசு! அவனுக்கோ வயசு அதிகம். நிர்மலாவை அவனுக்கு மூன்றுந்தாரமவா கொடுக்றது? சேச்சே! பாக்றவங்க என்ன சொல்லுவாங்க? நிர்மலா தான் சம்மதிப்பாளா? சொத்தில்லாம இல்லாட்டியும் கண் நிறைந்த மாப்பிள்ளை வேணும் பார்களே.

**சரஸ் :** நீங்க ஒரு அப்பாவி! இந்தப் பழமொழிகளையெல்லாம் நம்பிக்கிட்டு — நீங்க பாருங்க — "பணம் பத்தும்செய்யும்". பணம் இருந்தா — இந்த உலகத்துலே எல்லாவிதமான சொகங்களையும் அனுபவிக்கலாம்! நான் சொல்றது பொன்னுதானே, அனைத்துக்கும் பணக்காரருக்குத்தான் நிலைச்சுதா, ஏழைக்கு நாம நாளை கவலைச்சுமையாயிருக்கு! கட்டழகனாயிருந்தும் கதிக்கு வழியில்லாதவன் கையிலே அவளைப்பிடிச்சுக் கொடுத்தா — என்ன நடக்குமுன்னு — கொஞ்சம் யோசனை செய்து பாருங்க. மோகம் முப்பது நாள் — ஆசை அறுபது நாள்னு சொல்லுவாங்க. அதுக்கப்புறம் வறுமையின் கொடுமையிலே சிக்கி அழகு இருந்த இடம் தெரியாமெ மறைஞ்சுபோகும் ஆமா! — பசிக்கும்போ பத்தும் பறக்கும்.

**சங்க :** சரசு! என் மூளையைக்குழப்பாதே. உனக்கு எப்படிப் பதில் சொல்றதுன்னு எனக்கே தெரியல்லே!

எடுத்துக்கொண்டு வந்து எல்லோருக்கும் டீ கப்புகளை எடுத்துத்தருகிறாள்)

லீலா: பெண் அழகாத்தானிருக்கு. ஏம்மா உனக்குப் பாடத் தெரியுமா? (நிர்மலா அங்கிருந்த புதிய முகங்களை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு விருட்டென்று திரும்பிச்செல்கிறாள்—அவளையே பார்த்துக்கொண்டிருந்த ஜம்பு கையிலிருந்த கப்பிலிருந்து டீ அவனுடைய உடையின்மேல் சிந்திக்கொண்டிருந்ததைக்கூடக் கவனிக்கவில்லை.)

சரஸு: ஓ! அதெல்லாம் ஜோராப் பாடுவா! டேன்ஸ் ஆடுவா! பள்ளிக்கூடத்திலே டான்ஸுக்கு முதல் பிரைஸ் கூட வாங்கியிருக்கறளே! ரொம்ப வெட்கப்படறு—அதனலேதான் ஓடிட்டா.

லீலா: கல்யாணத்தெ எப்ப வெச்சுக்கலாம் சரஸு?

சரஸு: (தன் கணவனைக் காட்டி) அவரையே கேளுங்க.

லீலா: (சங்கரலிங்கத்தைப் பார்த்து) என்னங்க! பதில் சொல்லுங்க.

சங்கர: பெண்ணுக்கு மனசுக்குப் பிடிச்சுதான்னு தெரிஞ்சபிறகுதானே முடிவு சொல்லமுடியும்.

லீலா: என்னம்மா சரஸு! பெண்ணுக்கு இஷ்டம்தானே?

சரஸு: இஷ்டமில்லாமெ டீ கொண்டுவந்து கொடுப்பாளா? அதெல்லாம் இஷ்டம்தான்.

சாஸ்திரி: ஜாதகமெல்லாம் நன்ன, பொருத்தமாத்தான் இருக்கு! ஒருசில வைத்த விஷயங்களெல்லாம் பேசிமுடிக்காமெ, முடிவுசொல்றது எப்படீன்னுதான்-பெண்ணுடைய தகப்பனர் யோசிக்கிறப்பலே இருக்கு.

லீலா: நகை போட்ற விஷயமா சாஸ்திரிகள் குறிப்பிடுறப்லே இருக்குது.

சாஸ்திரி: ஆமாம்மா! அதைத்தான் சொன்னேன். (பல்லை இளிக்கிறர்)

ஜம்பு: அவுங்க எவ்வளவு நகை போடச் சொல்றங்களோ அவ்வளவும் போட்டுட்டாப் போச்சு.

சரஸு: நகை போட்டுட்டாப் போதுமா. பத்து எக்கர் நஞ்சை நிலமும் எங்க நிர்மலா பேர்லே எழுதிவைக்கணும்.

**ஜம்பு:** அதுக்கென்ன எழுதிவெச்சுட்டாப் போச்சு.

**லீலா:** அப்புறம் என்ன? நிச்சயம் முடிஞ்சாப்பிலியாச்சு. தாம்பூலம் எடுத்துக்கொடுங்க (சங்கரலிங்கத்தைப் பார்க்கிருள்.)

**சரஸூ:** (தாம்பூலத் தட்டைச் சங்கரலிங்கத்திடம் கொண்டு போய் நீட்டிக்கொண்டு) தாம்பூலத்தை எடுத்துக்கொடுங்க.

**சங்கரா:** (பெருமூச்சு விட்டுக்கொண்டே) தாம்பூலம் கொடுக்கிறர்.

**லீலா:** சரஸூ! அடுத்த முகூர்த்தத்திலேயே கல்யாணத்தை வச்சிடலாம். சாயங்காலமா வரேன்-கல்யாணத்துக்குச் செய்யவேண்டிய காரியங்களெல்லாம் செய்ய ஆரம்பிச்சுடுவோம். நாங்க புறப்படறோம். (எழுந்திருக்கிருர்கள்)

**நிர்மலா:** (தன் அறையில் தனியே இருக்கிறள்) இந்தக் கிழவனுக்கு நான் வாழ்க்கைப்படவேண்டுமாம்! என்ன அக்கிரமம்! இதுக்கொருநாளும் சம்மதிக்கமாட்டேன். (சுவற்றில் மாட்டப்பட்டிருந்த தன் தாயின் படத்தின் முன் நின்றுகொண்டு) அம்மா! அம்மா! என்னை இந்தக் கதிக்கு விட்டுவிட்டுப் போய்விட்டாயே அம்மா! (அழுகிறள்)

---

## காட்சி - 8.

[இடம்: ஜம்புவின் வீடு.

பாத்திரங்கள்: ஜம்புவும், லீலாவும்.]

**ஜம்பு:** லீலா! இந்தக் கல்யாணம் முடியும் வரைக்கும் நீ இங்கேயே இரு. கல்யாணத்துக்கு என்னென்ன செய்யணுமோ அதையெல்லாம் நீதான் கவனிச்சுச் செய்யணும்.

**லீலா:** ஆகட்டும் அண்ணு. எல்லாங் கவனிச்சுக்கிறேன். இன்னைக்குக்கூட சரஸூ வீட்டுக்குப் போயிட்டுத்தான் வந்தேன். ஆமா-கல்யாணப் பத்திரிக்கையெல்லாம் அச்சடிச்சு வந்தாச்சா?

**ஜம்பு:** கல்யாணப் பத்திரிக்கை கொஞ்சநேரத்திலே வந்து சேர்ந்துடும். ஆளை அனுப்பிச்சிருக்கிறேன்.

## காட்சி – 9.

[இடம் : நிர்மலாவின் அறை – நிர்மலா மேஜைமீது தலையைச் சாய்த்தபடி அழுதுகொண்டிருக்கிறள் — சரஸ்வதி உள்ளே வருகிறள்.]

சரஸ் : நிர்மலா !

நிர்ம : (மெதுவாகத் தன் தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டே) ஏன் சித்தி ?

சரஸ் : (ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டே) என்னத்தை நினச்சு அழுகிறயோ ?

நிர்ம : என் விதியை நினேச்சு ! என் ஆதரவற்ற நிலைமையை நினேச்சு !

சரஸ் : நிர்மலா ! உன் நன்மைக்காகத்தானே நல்ல இடமாப் பார்த்துக் கல்யாணம் செய்துவைக்கப் போறேம்.

நிர்ம : நல்ல இடமா ? எது நல்ல இடம் ?

சரஸ் : ஏன் ? 100 ஏகர் நந்சை நிலம் ! இரண்டு லட்சம் ரூபாய் ரொக்கப்பணம் ! நாலு, மாடி வீடுகள் ! ஏராள மான நகை ! இதைவிடப் பெரிய பணக்காரன் எங்கிருந்து கிடைப்பான் ?

நிர்ம : பணந்தான் முக்கியமா ?

சரஸ் : ''பணம் என்றல் பிணமும் வாய் திறக்கும்''னு சொல்லு வாங்களே !' பணம் பத்தும் செய்யும்''– '' பொருளிலார்க்கு இந்த உலக வாழ்வில்லே ''ன்னு வள்ளுவர்கூடச் சொல்லி யிருக்கிறரே !

நிர்ம : வள்ளுவர் சொன்னதெல்லாம் ஆண்களுக்கு !

சரஸ் : இவ பெரிய ஆராய்ச்சிக்காரி ! பணம் பெரிசுதான் நிர்மலா ! அதில் சந்தேகமே இல்லே.

நிர்ம : பணத்தைவிட அன்புதான் முக்கியம்.

சரஸ் : இருக்கட்டுமே ! அவரிடம் அன்பு இல்லேண்ணு உனக்கு எப்படித் தெரியும் ?

நிர்ம : எவரிடம் ?

**சாஸ் :** உன்னே மணம் செய்யப்போகும் ஜம்புலிங்க நாடாரிடம்.

**நிர்ம :** அந்தக்கிழவனே ?

**சாஸ் :** எதுக்காக அவரைக் கிழவன்ங்றே ?

**நிர்ம :** 60 வயசானவனைக் கிழவன்னு சொல்லாமெ என்னன்னு சொல்றதாம் ? இளேநன்னு சொல்லணுமோ ?

**சாஸ் :** 60 வயதுண்ணே வச்சுக்கவேன்—அதுனலென்ன ? "மனிதனுக்கு நூறு"ன்னு பெரியவங்க சொல்லிருக்குங்க. அதிலே பாதிதானே ஆச்சு.

**நிர்மலா :** ஆமா ! 100லே, பாதி 50 ! அதுக்குக் கமிஷன் 10 ! ஆக 60.

**சாஸ் :** ஏதேது ! கிண்டலாப் பேசறே !

**நிர்ம :** கிண்டலா ! கிண்டல் செய்றது நானல்ல சித்தி ! நீங்க தான் ! என் வயிற்றெறிச்சலை நீங்கதான் கிண்டிக்கிறீங்க !

**சாஸ் :** நீ சொல்றதைப் பார்த்தா, நான் உனக்குக் கொடுமை செய்யறதாக நீ நினைக்கிறப்போலே இருக்கே !

**நிர்ம :** நீங்க எனக்குக் கொடுமைதான் செய்யறீங்க.

**சாஸ் :** என்ன கொடுமை செய்தேண்டீ ?

**நிர்ம :** கொடுமையா ? ஒரு கிழவனுக்கு என்னைப்பலிகொடுத்து என் வாழ்வைக் குலைக்கத் திட்டமிடுவதைவிட வேறுஎன்ன கொடுமை வேண்டும் ? வேண்டாம் சித்தி ! என்மேல் இரக்கம் வையுங்கள் ! உங்கள் காலில் விழுந்து கெஞ்சு கிறேன். (காலில் விழுகிருள்)

**சாஸ் :** போதும் ! நிறுத்து ! வயதுப்பெண்ணை வீட்லெ வச்சிக்கிட்டு ஒரு கல்யாணத்தைச் செய்யறதுக்கு வழியில்லாமெத் திண்டாட்றவங்களுக்குத்தானே வருத்தம் தெரியும்.

**நிர்ம :** என்னல் உங்களுக்குத் திண்டாட்டமா சித்தி ? (எழுந் திருக்கிருள்)

**சாஸ் :** பின்னே என்னவாம் ? உன்னெ எவ்வளவு காலமா வீட்லே வச்சிக்கிட்டிருப்பாங்களாம் ? எவ்வளவு காலம் உனக்குச் சோறும் துணியும் கொடுத்துக்கிட்டிரிக்கணுமாம்? கோழிகூடத் தன் குஞ்சுகளை, வயசு வந்தவுடனே கொத்தித் துரத்திவிரட்டுதே !

நிர்ம : அப்படியானு, நான் இங்கே இருப்பது உங்களுக்கு வீண் செலவுண்ணு நினைக்கிறீங்களா ?

சரஸ் : சந்தேகமென்ன ?

நிர்ம : சித்தி ! இனிமேல் என் செலவுக்கு நானே வேலை செய்து சம்பாதிக்கிறேன் சித்தி.

சரஸ் : என்ன வேலை செய்து சம்பாதிப்பியாம் ?

நிர்ம : என்னை ஆசிரியர் பயிற்சிப்பள்ளிக்கு அனுப்பி வையுங்க. பயிற்சி முடிந்தபிறகு நானும் உங்களைப்போல ஆசிரியையாக வேலை செய்து சம்பாதிக்கிறேன்.

சரஸ் : அதுக்கும் பணம் வேண்டுமே. பணத்துக்கு எங்கே போறது ?

நிர்ம : அதுக்குச் சிறு தொகைதானே வேணும். 300 ரூபாயுக்கு மேலா ஆயிடும் ?

சரஸ் : முன்னூறு ரூபாய் ! யார் மூட்டைகட்டி வச்சிருக்கா ?

நிர்ம : அப்படியானுல்......? (கண்களில் நீர் வடிகிறது)

சரஸ : ஒரே வழிதான் உண்டு ! கல்யாணம் பண்ணிக்கோ.

நிர்ம : அந்தக் கிழவனையா ?

சரஸ : ஆம் !

நிர்ம : நான் மறுத்தால்... ?

சரஸ : நீ மறுப்பதோ, ஒப்புக்கொள்வதோ அல்ல இப்பொழுது உள்ள நிலைமை; எல்லாம் ஒழுங்கு செய்தாச்சு. கல்யாணப் பத்திரிகைகூட எல்லோருக்கும் அனுப்பியாச்சு. நிலைமை தெரிந்து புத்திசாலியா நடந்துக்கொ,

நிர்ம : சித்தி ! இந்தக் கல்யாணத்துக்கு நான் ஒருக்காலும் சம்திக்க முடியாது. (கோபத்துடன் சொல்லுகிருள்)

சரஸ : (கோபமாய்) ஓஹோ ! முடியாதா ! அதையுந்தான் பார்க்கப்போறேன். முடியுமா-முடியாதாங்கிறதே (தன் ஜாக்கெட்டில் சொருகியிருந்த கல்யாணப் பத்திரிகையை எடுத்து மேஜைமீது எறிகிருள்) இதோ ! உன் கல்யாணப் பத்திரிகை ! (கோபமாக எழுந்து வெளியே போகிருள்)

நிர்ம : கண்களில் நீர்வடிய சில விநாடிகள் அசைவற்று நிற்கிருள். அவள் கண்கள், அப்பத்திரிகையைப் பார்த்தபடி

இருக்கின்றன. அதைக் கையில் எடுக்கிறாள். பிரிக்கிறாள். கண்கள் ' அகலவிரிகின்றன. உதடுகள் துடிக்கின்றன. "நிர்மலாவை" — "ஐம்புலிங்க நாடாருக்கு" என்ற சொற்கள் பெரிதாக வளர்கின்றன. அவளுக்குத் தலை சுற்றுகிறது. கீழே விழுந்து மயங்கிக் கிடக்கிறாள்.

## காட்சி – 9 - A.

[நிலவு ஒளியில் ஊர் அமைதியாக இருக்கிறது. மணி 12 அடிக்கிறது. மணிக்கூண்டில்.]

## காட்சி – 10.

[இடம் : நிர்மலாவின் அறை;
பாத்திரம் : நிர்மலா (உணர்வுபெற்று மெதுவாக எழுந்திருக்கிறாள்)]

**நிர்ம :** இந்தப் பிசாசுகள்...என்னை...அந்தக்கிழவனுக்கு...பலி யிட்டு விடுவார்கள்...இது மனிதசமுதாயமா அல்லது மிருக சமுதாயமா! சீச்சீ! அந்தக்கிழவனை மணம் செய்வதை விட என் உடல் பிணமாவதே மேல்! ஆம்! இதுதான் நல்லமுடிவு! (அடுத்த அறைக்குள்ளிருந்த அலமாரிக்குச் சென்று, அதிலுள்ள புட்டிகளில் "விஷம்" என்று லேபிள் ஒட்டப்பட்டிருந்த ஒரு புட்டியைக் கையில் எடுத்துக்கொள்கிறாள். தன் அறைக்கு வருகிறாள்)

**நிர்ம :** "விஷமே! நீதான் என் உண்மையான தோழன். அந் தக்கிழவனை என் மனதின் உள்ளே வைப்பதைவிட உன்னை என் நெஞ்சின் உள்ளே வைக்கப்போகிறேன். அவனை நான் வெறுக்கிறேன். உன்னை நான் காதலிக்கிறேன். (கதவை உட்பக்கம் தாளிடுகிறாள். ஒரு கடிதத்தை எழுதி மேஜை யின்மீது இருந்த கல்யாணப் பத்திரிக்கையின்மீது வைத்து அதன்மீது ஒரு பேப்பர் வெயிட்டை வைக்கிறாள். தாயின் படத்தின் முன் வந்து நிற்கிறாள். தாயின் உருவம் படத்தி லிருந்து பேசுகிறது.)

உருவம் : நிர்மலா ! நீயும் இந்த உலகில் வாழப் பிறந்தவள். தற்கொலைசெய்வது அறிவற்ற செயல் ! மனிதனைத் தவிர எந்தப் பிராணியாவது தற்கொலை செய்வதுண்டா ! ஜான்சி ராணி, ஜோன் - ஆப்-ஆர்க், இருவரும் பெண்கள்தான். ஆனால், வீரப் பெண்மணிகள். நீ ஒரு வீரப் பெண்மணியாகாவிட்டாலும், உன் சொந்த வாழ்வை நடத்திச்செல்லவாவது உன்னிடம் மன உறுதி வேண்டாமா ? கோழைப் பெண்ணே ! உலகம் பெரியது ! எங்கு வேண்டுமானாலும் செல் ! என்ன வேண்டுமானாலும் செய் ! ஆனால், 'வாழ்வு' என்ற புஷ்பவின் கழுத்தை முறிக்கும் கொலைத்தொழிலை மட்டும் செய்யாதே ! புறப்படு ! வீட்டைவிட்டு இப்பொழுதே வெளியேறு. உன்னைப்பற்றிக் கவலைப்படாதே ! பறவைகளை நினைத்துப்பார். அவை காசுகொடுத்தா உணவு வாங்குகின்றன ! மன உறுதி மட்டும் இருந்தால் போதும். பிழைத்துக்கொள்ளலாம்; புறப்படு. (நிர்மலா தன் கைப் பெட்டியைத் திறந்து அதிலுள்ள சில்லறையை எண்ணிப் பார்க்கிறாள். பிரயாணச் செலவுக்கு அளவாகப் பணம் இருக்கிறது. கைப்பெட்டியை மூடிவிட்டுப் பூட்டி, அதை எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறுகிறாள்.)

## காட்சி - 11

*[ நிர்மலா காட்டுவழியே செல்கிறாள். ]*

நிர்மலா : (பாட்டு) (1).

நிலவே நீதுணையே - வழிநெடுக
நிலவே நீதுணையே

தாயை இழந்தவள் தனியாகச் செல்கிறேன்
தந்தையும் தாயுமாய் வந்திடு துணையாய் - (நிலவே)

1. பலகலை யோடுநீ நிலைகலங்காமல்
'பாரினில் ஒளி' என்றும் வீசுகின்றாய்
உலகினில் எந்தன் நிலைதனை இழந்தேன்
உற்றதோர் இடம்தேடி - நான்
உற்றதோர் இடம்தேடி - ஓடுகின்றேன் - (நிலவே)

2. கல்லும் குழிகளும் முள்ளும் என்மனதை
கலக்காமல் ஒளியால் காத்திடுவாய்
சொல்லும் உள்ளமும் சுத்தமுள்ளோரிடம்
சுகமாக என்னைக் கொண்டு - நீ
சுகமாக என்னைக்கொண்டு சேர்த்திடுவாய் - (நிலவே)

## காட்சி – 12

[ இடம் : சங்கரலிங்கத்தின் வீடு – வேலையாள் ஒருவன் கடிதம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு கதவருகில் நின்று கூப்பிடுகிறான். ]

**வேலை :** அம்மா ! அம்மா ! அம்மா !

**சங்கர :** யாரது ? (வெளியே வருகிறார். வேலையாளைப்பார்த்து) என்ன ?

**வேலை :** அம்மா, இல்லிங்களா ?

**சங்கர :** ஏன் ? என்னவேணும் ?

**வேலை :** ஒண்ணுமில்லிங்க...... இந்தக் கடுதாசியெ அம்மா கிட்டக் கொடுக்கச்சொல்லி எங்க எசமான் என்னை அனுப்பிச்சாருங்க.

**சங்கர :** உங்க எசமான் யாரப்பா ?

**வேலை :** அவருதானுங்க !...... ஜம்புலிங்க நாடாரு !

**சங்கர :** ஓ ! அவரா ? கடுதாசியெக் கொடு.

**வேலை :** அம்மா கையிலேயே கொடுக்கச்சொன்னாருங்க.

**சங்கர :** அப்படியா ? அம்மா வெளியே போயிருக்கு–வந்ததும் அம்மா கையிலேயே கொடுத்திட்றேன். கடிதத்தைக் கொடுத்துட்டுப்போ.

**வேலை :** (கடிதத்தைக் கொடுத்துவிட்டு) போய்ட்டு வர்ரேனுங்க. (தலையைச் சொரிந்துகொண்டே) காப்பிச் செலவுக்கு ......

**சங்கர :** அது வேறுமாக்கும்...... இரு, வர்ரேன். (உள்ளே போய்விட்டு வந்து நாலணாக் கொடுக்கிறார். அதை வாங்கிக்கொண்டு ஒரு கும்பிடு போட்டுவிட்டு வேலைக்காரன் போகிறான்)

**சங்கர :** அவள் கையிலேயே கொடுக்கணுமாமே!...... இவங்களுக்குள்ளே என்ன ரகசியமோ ? (அறைக்குள் சென்று கடிதத்தைப் பிரித்துப் படிக்கிறார்.)

"அன்புள்ள சரஸ்வதிக்கு உன் அண்ணா எழுதுவது:-

உன் உதவிக்கு நன்றி. கல்யாணம் முடிந்ததும் நான் உன்னிடம் சொன்னபடி உனக்கு வைர அட்டிகை வாங்கிக் கொடுப்பேன். எப்படியாவது பெண்ணின் மனதைச் சரி பண்ணி இந்தக் கல்யாணத்தை நீதான் முடித்துவைக்க வேண்டும்.

இப்படிக்கு,
ஐம்புலிங்கம்.

வைர நெக்லஸ்! ...எப்படியாவது பெண்ணின் மனதைச் சரிபண்ண வேண்டுமாம்!... இதில் ஏதோ சூது இருக்கிறது! நிர்மலாவுக்கு இந்தக்கல்யாணத்தில் பிரியமில்லையென்று தெரிகிறது. "பிரியமில்லாமலா டீ கொண்டுவந்து கொடுப்பாள்!" என்று சொன்னாளே சரஸ்! வைரநெக்லஸ் லஞ்சம்!...சதிகாரி!...கமிஷன் ஏஜண்ட் வேலையில் இறங்கியிருக்கிறாள்...நான் என் மகளுக்குக் கொடுமை செய்துவிட்டேன்! தாயற்ற பிள்ளை! பாவம்! உடனே நிர்மலாவைப் பார்த்து விஷயத்தை அறிகிறேன். (நிர்மலாவின் அறைக்குள் போகிறார். அங்கு நிர்மலா இல்லாததால் வெளியே வருகிறார்.) நிர்மலா! நிர்மலா! நிர்மலா!......எங்கே போயிருப்பாள்?... மறுபடியும் நிர்மலாவின் அறைக்குள் சென்று மேஜையின் மீது இருந்த கடிதத்தை எடுத்துப்படிக்கிறார்.

"அப்பா! நீங்கள் ஒரு அப்பாவி! சித்தியின் திறமைக்கு முன் உங்கள் யதார்த்த குணம் தோல்வியடைந்துவிட்டது. எத்தனையோ பாடுபட்டுத்தாயினும் மேலாக என்னைப் பாது காத்து வளர்த்தீர்கள்! எல்லாம் வீணாயிற்று. ஆசிரியத் தொழிலோடு நீங்கள் வைத்தியமும் செய்து வந்ததால் இந்த இக்கட்டான நிலைமையில் இந்த "விஷம்" எனக்கு அமிர்தமாக உதவப்போகிறது. நான் என் அம்மாவிடம் போகிறேன். நான் தற்கொலை செய்து கொள்வதற்காக என்னை மன்னித்து விடுங்கள். என் விதி அப்படியிருக்கிறது. சித்தியையோ வேறு யாரையோ நான் குறைகூறவில்லை. அவர்களுக்கு மனதில் "சரி" என்று பட்டதைச் செய்திருக்கிறார்கள். நீங்கள் சித்தியுடன் சந்தோஷமாக வாழ வேண்டும். நீங்கள் இக்கடிதத்தைப் படிக்கும்பொழுது நான் பிணமாயிருப்பேன். எனக்காக அழாதீர்கள். வணக்கம்.

இப்படிக்கு,
துர்ப்பாக்கியவதி நிர்மலா.

(கடிதத்தைப் படித்து முடிக்கும் வரை கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது. கைகள் நடுங்கின.)

**சங்கர:** நான் ஒரு முட்டாள்!...சரஸ்வதி!...பாதகி!...கைகேயி!

## காட்சி – 13.

[தஞ்சாவூர் செல்லும் ரயிலில் பெண்கள் வண்டியில் நிர்மலா மயங்கி விழுந்து விடுகிருள். பக்கத்தில் இருந்த பெண்கள் அவளைத் தூக்கி பெஞ்சின் மேல் படுக்கவைத்து உதவி செய்கிருர்கள்.]

## காட்சி - 14.

[ இடம் : தஞ்சாவூரில் ராஜம்மாளின் வீடு;
பாத்திரங்கள் : ராஜம்மாளும் நிர்மலாவும் ]

**நிர் :** (மயக்கத்துடன் கட்டிலில் படுத்திருந்த நிர்மலா கண் விழித்துப் பார்க்கிருள்.) நான் எங்கே இருக்கிறேன்? ...

**ராஜம்மாள் :** எங்கள் வீட்டில் தானம்மா இருக்கிருய். ஒன்றும் கவலைப்படாதே. நானும் என் தாயாரும்தான் இந்த வீட்டில் இருக்கிருேம்.

**நிர் :** நான் எப்படி இங்கு வந்தேன்? (படுக்கையில் எழுந்து உட்காருகிருள்.)

**ராஜம் :** நீ ரயிலில் மயங்கி விழுந்து விட்டாய். நாங்கள் உன்னை ஒரு டாக்ஸியில் வைத்து இங்கு கொண்டு வந்தோம். இப்பொழுது உடம்புக்கு எப்படியிருக்கிறது ?

**நிர் :** உடம்புக்கு ஒன்றுமில்லை. நன்றாயிருக்கிறது. உங்களுக்கு ரொம்ப நன்றி. நீங்கள் யார் ?

**ராஜம் :** என் பெயர் ராஜம்மாள். நான் இந்த ஊரிலுள்ள நடனக் குழுவில் நடனம் ஆடும் பெண்களில் ஒருத்தி.

**நிர் :** நடனமா ? எனக்கும் நடனம் தெரியும்.

**ராஜம் :** அப்படியா ! ரொம்ப சந்தோஷம். உன் பெற்ருேர் யாரம்மா? நீ ஏன் தனியாக ரெயிலில் வந்தாய் ?

**நிர் :** என் வரலாறு ஒரு சோகமான கதை. என் சொந்த ஊர் மதுரை. நான் சிறுமியாக இருக்கும்போது என் தாய் இறந்து விட்டார்கள். என் தந்தை மறு விவாகம் செய்து கொண்டார். என்னை ஒரு கிழவனுக்கு மணமுடிக்க என் சித்தி ஏற்பாடு செய்து விட்டாள். கல்யாணப் பத்திரிக்கை கூட எல்லோருக்கும் அனுப்பி விட்டார்கள். அதனுல் வீட்டை விட்டு ஓடி வந்து விட்டேன்.

**ராஜம் :** அப்படியா? பாவம்! உன் பெயரென்னம்மா?

**நிர் :** என் பெயர் நிர்மலா.

**ராஜம் :** நீ எங்கள் வீட்டிலேயே தங்கியிரு நிர்மலா. உன்னை எங்கள் நடனக் குழுவில் சேர்த்துவிடுகிறேன். உனக்குச் சம்பளம் கிடைத்த பிறகு, எங்கள் வீட்டின் பின் பாகத்திலேயே – அதாவது உனக்குத் தனியாக இருக்க வேண்டுமென்று பிரியமானால் – குடியிருந்து கொள்ளலாம். உன்னை என் சொந்தத் தங்கைபோல் கவனித்துக்கொள்ளுகிறேன் நிர்மலா!

**நிர் :** உங்களுக்கு ரொம்ப நன்றி அக்கா!

**ராஜம் :** நிர்மலா! உன் பெயரை மாற்றி வைத்துக்கொள். அப்பொழுதுதான் உன் பழைய வரலாறு யாருக்கும் தெரியாமல் இருக்கும். இனிமேல் உன் பெயர் " நர்மதா " என்று இருக்கட்டுமே; என்ன?

**நிர் :** சரி அக்கா!

## காட்சி – 15

[ இடம் : புதுக்கோட்டையில் கோபால் பிள்ளையின் பங்களா.

**பாத்திரங்கள் :** கோபால் பிள்ளை, ராஜன், சந்திரன், ராஜனின் தாய் ]

**கோபால் பிள்ளை :** ராஜா!

**ராஜன் :** அப்பா!

**கோபால் :** குத்தகைப்பணம், வாடகைப்பணம், எல்லாம் பாக்கி நிற்கிறது. வசூலுக்குப் போகணும். நீ போறியா? நானே போகட்டுமா?

**ராஜன் :** நானே போய்ட்டு வர்ரேன்.

**சந்திரன் :** நானும் உன்னோடே வருவேன்.

**கோபால் :** ஆமாப்பா, சந்திரனையும் கூட்டிப்போ. தஞ்சாவூரிலே இருக்கிற பிரகதீஸ்வரர் கோயில், மாட மாளிகை, கூட கோபுரம், சரஸ்வதி மஹால் எல்லாம் காட்டு.

**ராஜன் :** ஆகட்டும்ப்பா – இப்பவே புறப்பட்ரோமே.

**கோபால் :** அப்படியா ? சரி ! பாக்கிப் பட்டியல் கொடுக்கிறேன்; கொண்டுபோ. (மேஜையின் ட்ராவைத் திறந்து பட்டியலையும், ஒரு மணிபர்ஸையும் எடுத்துக் கொடுக்கிருர்) இந்தப் பணத்தைச் செலவுக்கு வச்சுக்கோ.

**ராஜன் :** போயிட்டு வாரோம்ப்பா.

**கோபால் :** போய்ட்டு வாங்க. (போகிருர்கள். அறையைவிட்டு வெளியே போனதும் சந்திரன் ராஜனுக்குக் கிச்சுக்காட்டுகிருன்.)

**ராஜன் :** அட ! சும்மா இரப்பா !

**சந்தி :** டோய் ! ஜாலிட்ரிப் ! ஜாலிட்ரிப் ! (மறுபடியும் கிச்சுக்காட்டுகிருன்)

**ராஜன் :** சரி சரி ! உன்னுடைய ஜாலியிலே என்னுட உயிரே வாங்காதே: கொஞ்சம் சும்மா இரேன். (சமையலறைக்குள் நுழைகிருர்கள்.)

**ராஜன் :** அம்மா !

**தாய் :** வாப்பா !

**ராஜன் :** பாக்கி வசூலுக்குத் தஞ்சாவூருக்குப் போறேம்மா.

**தாய் :** யாராரு போரீங்க ?

**ராஜன் :** நானும் சந்திரனும்.

**தாய் :** அப்படியா ? சாப்பாட்டுக்குப் பிறகுதானே போறீங்க.

**ராஜன் :** இல்லேம்மா – இப்பவே புறப்பட்றேம்.

**தாய் :** அப்படீன்ன காபியாவது சாப்பிட்டுப் போங்க. உட்காருங்க. (உட்காருகிருர்கள்) திரும்பிவர எத்தனை நாளாகும்?

**ராஜன் :** ஒரு வாரம் ஆகுமம்மா. ( காப்பி சாப்பிடுகிருர்கள் ) போய்ட்டு வர்ரோம்மா.

**தாய் :** போய்ட்டு வாங்கப்பா. உடம்பெ பத்திரமாக் கவனிச்சுக்குங்க. (இருவரும் வெளியே போகிருர்கள்.)

## காட்சி - 16.

[ இடம்: புதுக்கோட்டை — தஞ்சாவூர் ரஸ்தா
**பாத்திரங்கள் :** ராஜனும் சந்திரனும் காரில் செல்கிருர்கள். ராஜன் கார் ஓட்டுகிருன். ]

**சந்திரன் :** ( இசை பாடுகிருன். )

லாலல்ல லாலல்ல லாலல் லல்லா
லாலல்ல லாலல்ல லாலல் லல்லா
லாலல் லல்லா லாலல் லல்லா
லாலல் ... ... ... ... ... ...

அடே ! அதென்னப்பா ?

**ராஜன் :** எது ?

**சங் :** அதோ ! ( பாதையின் ஓரத்தில் நின்று கொணடிருநத மான் ஒன்றைச் சுட்டிக்காட்டுகிருன். )

**ராஜன் :** அதுவா ? வெண்டைக்காய் ! மானெப்பார்த்து இப்படி வாயப்பிளக்கிறயே ! இதுவரைக்கும் மானெப்பார்த்த தில்லையா ?

**சங் :** மானெப் பார்த்திருக்காமெ இருப்பாரு எவருவது ? மான் என்ன - சிங்கம் புலி கூடத்தான் பார்த்திருக்கிறேன் - மிருகக் காட்சி சாலையிலெயும், சர்க்கஸிலெயும்.

**ராஜன் :** பின்னெ எதுக்காக வாயெப்பிளந்தாயாம் ?

**சங் :** சரிதான் ! கூண்டிலே அடைபட்டிருக்ற மிருகத்தெப்பார்க்றதுக்கும் - காட்டிலெ - மனம்போலத்திரிந்து - பாதையோரம் இப்படி வந்து - மருண்ட பார்வைகொண்டு - அப்படிப் பார்க்குதே ! - இந்த மானெப்பார்க்றதுக்கும் வித்தியாசமில்லையா ?

**ராஜன் :** இவுரு பெரிய ரசிகரு !

**சங் :** ராஜா !

**ராஜன் :** என்ன ?

**சங் :** கேமிரா கொண்டு வந்திருந்தால் - அருமையான ''ஷாட்'' எடுத்திருக்கலாம். ( கார் பிரிவுச்சாலெலில் திரும்புகிறது )

## காட்சி – 17.

[ராஜனும் சந்திரனும் உட்கார்ந்துகொண்டிருக்கும் கார் பிரிவு சாலையில் போய்க்கொண்டிருக்கிறது.]

**சந்திரன் :** இந்தப் பாதை எங்கே போகிறது ?

**ராஜன் :** இந்தப் பாதை எங்கேயும் போகிறதில்லே ? நாம்தான் போகிறோம்.

**சந்தி :** தப்பு தப்பு ! கார்தான் போகுது.

**ராஜன் :** அட ! என் புத்திசாலியே !

**சங் :** இப்படித்தான் எங்க பாட்டி சொல்லுவா.

**ராஜன் :** எப்படி ?

**சங் :** ..நான் புத்திசாலின்னு. என் நெற்றியைப் பார் !

**ராஜன் :** ஏன் ? நெற்றியிலே என்ன ?

**சங் :** என் நெற்றி அகலம் !

**ராஜன் :** அகலமானு ?

**சங் :** புத்தி அதிகம்னு சொல்லுவாங்க.

**ராஜன் :** ஓ !......... சரிதான். (சிரிக்கிறான்)

**சங் :** ஏன் சிரிக்கிறே ?

**ராஜன் :** கழுதையிருக்கே, கழுதை ! அது ரொம்ப புத்திசாலி!

**சங் :** கழுதை எப்படி புத்திசாலியாகும் ?

**ராஜன் :** கழுதைக்கு நெற்றி ஒரு முழம். (இருவரும் சிரிக்கிறார்கள்.)

---

## காட்சி – 18.

[ஒரு சிறு பங்களா முன் கார் நிற்கிறது]

**ராஜன் :** சந்திரா ! இதுதான் நமது " காட்டு பங்களா "

**சங் :** ஓ! அப்படியா? (இருவரும் காரிலிருந்து இறங்குகிறார்கள்) (காவல்கார சொக்கப்பன் ஓடிவந்து நிற்கிறான்)

**ராஜன் :** சொக்கப்பா ! சௌக்கியமா ?

**சொக் :** சௌக்கியந்தானுங்க.

**ராஜன் :** நாயர் எங்கே சொக்கப்பா ? அதோ, நாயரே வந்தாச்சு !

**நாயர் :** நமஸ்காரம் ஸாரே !

**ராஜன் :** நமஸ்காரம் நாயர்! நலந்தானே?

**நாயர் :** வளர நலந்தன்னே.

**ராஜன் :** நாயர்! இவர் என் நண்பர். கோவையிலிருந்து வந்திருக்கிறார். நம்ம முந்திரிக்காடெல்லாம் சுற்றிப்பார்க்க வந்திருக்கிறோம். இரண்டு மூன்று நாட்கள் இங்கே தங்கியிருப்போம். சமையல் நன்றாக இருக்கட்டும். தெரிகிறதா?

**நாயர் :** அசல் ஒண்ணாம் நம்பர் "ஊண்" கொடுக்கும் இந்த நாயர். பொம்பாயிலே மூனு கொல்லம், ஞான், பட்லர் பணி செய்துட்டுண்டு ஸாரே!

## காட்சி – 19.

[ இடம் : தஞ்சை ஜில்லா பிரகதீஸ்வரர் கோயில் பிராகாரம் ]

**சந்திரன் :** இவ்வளவு பெரிய நந்தியை ஒரே கல்லாலே செய்திருக்கிறானே நம்ம நாட்டுச் சிற்பி!

**ராஜன் :** கோபுரத்து உச்சியிலிருந்து பார்த்தா ... ...

**சங் :** பிளேனிலிருந்து பார்க்கற மாதிரி இருக்குமில்லே?

**ராஜன் :** சந்திரா! நேரமாச்சு. திரும்பலாமா?

**சங் :** நாளைக்கு மாடமாளிகைகளும் கூடகோபுரமும் பார்க்கலாமா?

**ராஜன் :** சரி, வா போகலாம். ( இருவரும் காரில் ஏறிக்கொள்கிறார்கள். கார் கடைவீதி வழியே போய்க்கொண்டிருக்கிறது. சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த விளம்பரங்களைச் சந்திரன் படிக்கிறான். )

**சங் :** "நடன அலங்காரி - நர்மதா தேவியும் பார்ட்டியாரும் - ஒப்பற்ற நடனங்கள். காணத்தவறாதீர்கள். இடத்துக்கு முந்துங்கள்." - ராஜா நடனம் பார்க்கலாமா?

**ராஜன் :** பார்த்தாப் போகுது.

## காட்சி - 20.

[இடம்: நடனக் கொட்டகை — முன் வரிசை சோபாக்களில் ராஜனும் சந்திரனும் — திரை கொஞ்சம் கொஞ்சமாக விலகுகிறது. தாமரை மலர் போன்ற பாதங்கள் இரண்டு தோன்றுகின்றன.]

(சதங்கை ஒலி)
(வீணையின் நாதம்) } ஒரே சமயத்தில்

(திரை மேலும் விலகுகிறது. சதங்கை ஒலியும் வீணகானமும் இணைகின்றன. நடனமாதின் உருவமும் வீணை வாசிப்பவளின் உருவமும் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படுகின்றது. நடனமாது பாடிக்கொண்டே நடனம் செய்கிறாள்.)

பாட்டு (2)

மஞ்சிலா நிலவினிலே.........ஆ........
மஞ்சிலா நிலவினிலே— அன்று
மஞ்சிலா நிலவினிலே—என்னுடன்

1. கொஞ்சிடும் மொழிபேசியே—எந்தன்
நெஞ்சினைக் கவர்ந்து சென்றான்........ஆ........
நெஞ்சினைக் கவர்ந்து சென்றான்—எந்தன்
நெஞ்சினைக் கவர்ந்து சென்றான்—மற்றென்
நினைவையும் பறித்துச் சென்றான்— (மஞ்சிலா)

2. மாலைப்பொழுதினில் சோலையில் குயிலோசை
மனத்தினை வாட்டுதே .......ஆ........ (மாலைப்)
வேலைத்திரையொலி மீண்டும் மீண்டும் வந்து
வேதனையாக்குதே.................ஆ................ (வேலைத்)
காலைப்பொழுதுவரை கண்ணுறங்காதடி
கனலால் உடலெரியக் காரணம் என்னவோடி—
(மஞ்சிலா)

(திரை விழுகிறது — ராஜன் பெருமூச்சு விடுகிறான்)

**சந்திரன்:** ராஜா! எப்படி - நடனம்!

**ராஜன்:** ஆ...ஹா! என்ன நடனம்! என்ன அழகு! என்ன குரல்! என்ன இனிமை! என்ன பாவனை!

**சந்தி :** என்ன............**ராஜன் :** ஒய்யாரம் !
**சந்தி :** என்ன............**ராஜன் :** பார்வை !
**சந்தி :** என்ன............**ராஜன் :** வசீகரம் !
**சந்தி :** என்ன............**ராஜன் :** இளமை !
**சந்தி :** என்ன............**ராஜன் :** என்ன ?
**சந்தி :** என்ன............**ராஜன் :** என்ன ?

(இருவரும் சிரிக்கிறார்கள் – கடைசி நடனம் ஆரம்பிக்கிறது)

பாட்டு (3) (கண்ணனும் கோபிகளும்)

தலைவி : (நர்மதாதேவி) :—

கானம் பாடிக் கருத்தைக் கவர்ந்த
கள்வன் எங்கு சென்றான்—அந்தக்
கள்வன் எங்கு சென்றான்............ஓ............

**கோரஸ் :** கள்வன் எங்கு சென்றான்....ஓ....(கள்வன்)

**தலைவி :** வானம் பார்த்த பயிராய் என்னை
வாடவிட்டுச் சென்றான்—வண்ணான்
வாடவிட்டுச் சென்றான்........ஓ.......

**கோரஸ் :** வாடவிட்டுச் சென்றான்........ஓ......(வாடட)

(கண்ணன் தூரத்தில் குழலூதும் ஓசை கேட்கிறது)

**தலைவி :** கண்ணைக்கையால் மூடவந்து நிற்பான்—அவன்
கண்ணைக்கையால் மூடவந்து நிற்பான்—எந்தன்
பின்னற்சடையால் கைகட்டிடுவேன்....ஓ....

**கோரஸ் :** பின்னற்சடையால் கைகட்டிடுவேன்....ஓ....
(பின்னல்)

(குழலோசை அருகில் கேட்கிறது.)

**தலைவி :** என் கண்ணன் வந்துவிட்டான்— ஏதோ
என் கண்ணன் வந்துவிட்டான்—மாயன்
இங்கெங்கோ நின்றுவிட்டான்........ஓ........

**கோரஸ் :** இங்கெங்கோ நின்றுவிட்டான்........ஓ........(இங்)

**தலைவி :** எங்கே? எங்கே? எங்கே? அவனெங்கே?

**கோரஸ் :** எங்கே? எங்கே? எங்கே? அவனெங்கே?

**எல்லோரும் :** அவனெங்கே அவனெங்கே அவனெங்கே....

*(கண்ணன் தலைவியின் அருகில் வந்து நின்று குழலூதுகிறான் தலைவி தனது நீண்ட பின்னற்சடையாலே அவனது கைகளைப் பின் கட்டாய்க்கட்டுகிறாள்)*

## காட்சி – 21.

*[இடம் : நடனக் குழுத்தலைவனான பாலனின் அறை*

**பாத்திரங்கள் :** *பாலன், ராஜன், சந்திரன், நர்மதா]*

**ராஜன் :** வணக்கம்!

**பாலன் :** வணக்கம்! வாருங்கள்.

**ராஜன் :** இவர் என் நண்பர், சந்திரன் என்று பெயர்.

**பாலன் :** (சந்திரனைப்பார்த்து) வணக்கம்! என் பெயர் பாலன்.

**சந்திரன் :** வணக்கம்! (ராஜனைக்காட்டி) இவர் புதுக்கோட்டை கோபால் பிள்ளையின் மகன்! பெயர் ராஜன். இவர் ஒரு ரசிகர்.

**பாலன் :** அப்படியா? மகிழ்ச்சி. உட்காருங்கள் (உட்காருகிறார்கள்.)

**ராஜன் :** என் நண்பர் சொல்வதுபோல நான் ஒன்றும் அவ்வளவு பெரிய கலைவாணன் அல்ல. இன்றைய நடனங்கள் என் மனதை மிகவும் கவர்ந்தன. உங்கள் நடனராணி, ஒரு கலைவாணி! என்ன கலையறிவு! என்ன அற்புதமான நடனம்!

**பாலன் :** நீங்கள் சொல்வதைக்கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.

**ராஜன் :** உங்களைப்பார்த்துப் புகழ்மொழி கூறிவிட்டுப்போகவே வந்தோம். தொந்திரவு கொடுத்ததற்கு மன்னிக்கவும்.

**பாலன் :** தொந்திரவா ! உங்களைப்போன்ற கனவான்கள் வாயால் புகழ்மொழி கேட்பதைவிட எங்களுக்கு வேறு என்ன வேண்டும் ?

**ராஜன் :** ஒரு வேண்டுகோள்.

**பாலன் :** என்ன ? சொல்லுங்கள்.

**ராஜன் :** உங்கள் நடனக்குழுவால் எங்கள் ஊரிலும் நடனங்கள் நடத்தப்பட்டால் நன்றாயிருக்கும்.

**பாலன் :** அப்படியே செய்வோம். உங்களைப்போன்ற பெரிய மனிதர்களின் உதவியிருக்கும்போது கலை வளரத்தான் செய்யும். இன்னும் சில நாட்கள் இந்த ஊரில் நடனமாடு வதற்கு ஒப்பந்தம் இருக்கிறது. அது முடிந்தவுடன் உங்கள் ஊருக்கு வருகிறோம்.

**ராஜன் :** மிக்க நன்றி. போய் வருகிறோம்.

**பாலன் :** சற்று இருங்கள். (உள்ளே சென்று நடனராணியை அழைத்து வருகிறான்) இவர்தான் எங்கள் நடனராணி ! பெயர் நர்மதாதேவி. ( நர்மதாவைப்பார்த்து ) நர்மதா ! இவர் ஒரு ரஸிகர். உன் நடனங்களைப்பற்றிப் புகழ்மாலை சூட்ட வந்திருக்கிறார்.

**நர்மதா :** (ராஜனை நோக்கி) வணக்கம் !

**ராஜன் :** (எழுந்து நின்று) வணக்கம் ! உண்மையாகவே உங்கள் நடனங்கள் மிகச்சிறந்தவை. நீங்கள் நடனக் கலையின் சிகரம். (நர்மதா ராஜனின் முகத்தை இமைகொட்டாமல் பார்க்கிறாள். இருவர் பார்வைகளும் ஒன்றுபடுகின்றன. சில விநாடி அசைவற்று நிற்கின்றனர். காதல் உணர்ச்சி மின்னல்போல் அவர்கள் முகங்களில் தோன்றுகின்றது)

**நர்மதா :** தங்கள் புகழ்மொழிக்கு மிக்க நன்றி.

**ராஜன் :** உங்கள் நடனங்களை எங்கள் ஊரிலும் நடத்தி வைக்கும்படி உங்கள் குழுத்தலைவரைக் கேட்டுக்கொண்டேன். உங்களையும் வேண்டிக்கொள்கிறேன்.

**பாலன் :** நானும் சம்மதித்து விட்டேன், நர்மதா !

**நர்மதா :** மிக்க மகிழ்ச்சி ! போய் வருகிறேன், வணக்கம். (போய் விடுகிறாள்) (ராஜனும் சந்திரனும் எழுந்திருக்கிறார்கள்).

**ராஜன் :** வணக்கம் ! போய் வருகிறோம்.

**பாலன் :** வணக்கம் ! உங்கள் ஆதரவு என்றும் வேண்டும்.

**சந்திரன் :** வணக்கம் !

**பாலன் :** வணக்கம் !

## காட்சி – 22.

[இடம் : மேக்கப் அறை]

**மேக்கப்மேன் :** *என்னம்மா இது! மேக்கப்பைக் கலைக்காமே சும்மா உட்கார்ந்திருக்கிறீங்களே! உடம்புக்கு ஏதாவது...?*

**நர்மதா :** *இல்லை! உடம்புக்கு ஒன்றுமில்லை! எதையோ நினைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டேன் (எழுந்துசென்று மேக்கப்பைக் கலைக்கிறாள்).*

---

## காட்சி – 23.

[இடம் : ராஜம்மாள் வீட்டின் பின்பக்கம் ஒரு அறை – நர்மதா தூக்கத்திலிருந்து விழித்தெழுகிறாள் – படுக்கையில் உட்கார்ந்தபடி நிலைக்கண்ணாடியில் தன் பிம்பத்தை நோக்கிப் பாடுகிறாள்]

பாட்டு (4)

**நர்மதா :**

நித்திரையில் வந்து பேசினான்—எண்ணம்
நிலைதடுமாறிக் கலங்கினேன்

முத்தின் ஒளியை மயக்குதடீ உந்தன்
முறுவல்தரும் ஒளி என்றிட்டான் — — (நித்திரை)

சற்றே எந்தன் முகத்தை—உன் கண்
சாற்றின தென்ன வித்தை -என்றே
சுற்றுமுற்றும் பார்த்திட்டான்—முகம்
பற்றியோர் முத்தமிட்டான் — — (நித்திரை)

*என் மனம் இடைவிடாமல் அந்தக் கட்டழகனையே எண்ணுகிறது? கனவிலும் அவன் முகம் தோன்றுகிறதே! (படுத்துக் கொள்கிறாள் — தூக்கமின்றிப் புரள்கிறாள் — கனவு காண்கிறாள்.)*

## காட்சி - 24.

*[கலையில் - நர்மதா இளவரசியாகத் தோழிகளுடன் நந்த வனத்தில் விளையாடிக் கொண்டிருக்கிருள்—காதலனுகிய இளவரசன் (ராஜன்) வருகிருன். தோழிகள் விலகிச் செல்கிருர்கள்]*

*பாட்டு (5)*

*இளவரசன்:* **அன்பிலே அணைந்துசென்ற அன்னமே!–அன்பிலே...**

*இளவரசி :* **கனவிலே கலந்து சென்ற கள்வனே! – கனவிலே...**

*இளவரசன் :* **அருகில் வா ! அருகில் வா ! அருகில் வா !**

*இளவரசி :* **யாரோ நீர் ? யாரோ நீர் ? யாரோ நீர் !**

*இளவரசன் :* **நீயும் நானும் வேறல்ல—நினைவிலும்**

*இளவரசி :* **கனவிலும்...**

*(இருவரும்)* **ஈருடலும் ஒருயிரே ஆயினேும்**

*இளவரசன் :* **ஆயினேும் !**

*(தோழிகள் கோரஸ்)* **ஆயினேும் !**

*இளவரசி :* **ஆயினேும் !**

*(தோழிகள் கோரஸ்)* **ஆயினேும் !**

## காட்சி - 25.

*[இடம் : ராஜனின் இருப்பிடம். ஷேவிங் செய்துகொண்டே பாடுகிருன்]*

*பாட்டு (6)*

**ராஜன் :** கண்டதுமே காதல் என்பார்—லா லல லலா
கதையென்றே நினைத்திருந்தேன்
வண்டுமொய்க்கும் மலர்க்குழலாள்-லா லல லலா
வண்டுமொய்க்கும் மலர்க்குழலாள்-லா லல லலா
வந்தெனது உளம் அமர்ந்தாள்.... (கண்டதுமே)

**சந்திரன் :** பார்த்தவுடன் உந்தன் புத்தியும் சித்தமும்
பார்வையில் கலந்ததுவோ—அவளுடைய
பார்வையில் கலந்ததுவோ ?
நேற்று இரவுமுதல் வேட்கை மிகுந்திடவே
நெஞ்சினில் வீசியதோ-காதல் புயல்
நெஞ்சினில் வீசியதோ ?

**ராஜன் :** காதல்–நோவு–கடின–மா–ன–நோவு !

**சந்தி :** விருந்து–சாப்–பிட்டால்–போ–கும் !

**ராஜன் :** விருந்தா ?

**சந்தி !** ஆம் ! விருந்து.

**ராஜன் :** (பெருமூச்சு விடுகிருன்)
உனக்கு கேலியாக இருக்கு... ஊம்... !

**சந்தி :** கேலியல்லப்பா. உன்னுடைய நோவுக்கு விருந்தே மருந்து.

**ராஜன் :** விளங்கலேயே !

**சந்தி :** விளங்கிக்கிற நிலேயிலே நீ இப்ப இல்லேயே ! உன் காதலிக்கு ஒரு விருந்து ஏற்பாடு செய் ! நோய்தானுகத் தணியும் !

**ராஜன் :** ஓ...! நல்ல யோசனேதான் ! ஆனுல்...

**சந்தி :** ஆனுல் என்ன – ஆனுல் – நடனக்குழுவினருக்கு விருந்து வைக்றமாதிரி ஏற்பாடு செய்தா – அவளும் வர்ரா ! ராஜா ! ஒரு சந்தேகம். அவள் உன்னேக் காதலிக்கிருளோ இல்லேயோ ?

**ராஜன் :** எப்படித் தெரியும் ? ஒரு தடவைதானே சந்திச்சோம். பிறகு பார்த்துப் பேசக்கூட இல்லேயே.

**சந்திரன் :** பேசவேணுமாக்கும் —

(பாட்டு) : **கண்ணேடு கண்ணிணே நோக்கொக்கின்**
**வாய்ச்சொற்கள் என்ன பயனுமில!**

**ராஜன் :** கண்ணேடு – கண் – இணேநோக்கின்... ஆம் ! சந்திரா ! அவளும் தான் என்னேக் காதலிக்கிருள். அவள் என்னேப் பார்த்த பார்வை, என் கண்களின் வழியாக ஊடுருவிச்

சென்று என் உள்ளத்தில் பதிந்து முளைத்துக் காதல் பயிராக வளர்ந்திருக்கிறது. ஆம்! அவளும் நோக்கினுள் நானும் நோக்கினேன்.

**சந்தி :** உன் நம்பிக்கையை உறுதிப்படுத்திக்கொள்ளத்தான் விருந்து வைக்கச் சொன்னேன்.

**ராஜன் :** ஆம்! அவளுக்கு விருந்து வைக்கவேண்டும். அவள் எனக்கு விருந்து வைத்தாளே!

**சந்தி :** அடடெ – அதெப்போ?

**ராஜன் :** நேற்று இரவில்தான். தன் கண்களின் கனிவான பார்வையால் என் கருத்துக்கு விருந்து வைத்தாள். கட்டழகினுல் என் கண்களுக்கு விருந்துவைத்தாள். கொவ்வைக்கனியிதழ் வாயால் என் செவிகளுக்கு விருந்தளித்தாள். புன்முறுவலால் என் புத்திக்கு விருந்தளித்தாள்.

**சந்தி :** காதல் பேசுகிறதப்பா...காதல் பேசுகிறது.

**ராஜன் :** சந்திரா! ஒரு யோசனை

**சந்தி :** சரிதான்! மூளை வேலெசெய்ய ஆரம்பிச்சிடுத்தோ?

**ராஜன் :** ஆனந்த பவனிலே — இன்று பகல் — நடனக்குழுவினருக்கு விருந்து ஏற்பாடு செய்துவிட்டு, அதற்கு வரும்படி நாளே அவளிடம் நேரில் கேட்டுக்கொள்ளப் போகிறேன். (உடைகளை அணிந்துகொள்கிறன்).

**சந்தி :** ஊ...ம்! காதல் அரும்பிவிட்டது! இனி மொக்காகி, மலராகி, மணம் வீசும்! நடக்கட்டும்! நடக்கட்டும்!

## காட்சி – 26.

[இடம் : நர்மதாவின் அறையின் வெளிப்பக்கம் – ராஜன் கதவைத் தட்டுகிருன்.]

டக் டக் டக்! டக் டக் டக்!

**உள்ளேயிருந்து குரல் :** யாரது?

**ராஜன் :** நான்தான். (கதவு திறக்கப்படுகிறது. அவனைக்கண்டதும் அவளுடைய கண்கள் அகல விரிகின்றன.)

நர்மதா : ஆ!...... நீங்கள்!

ராஜன் : ஆம்...... நானேதான்.

நர்மதா : உள்ளே வாருங்கள். (இருவரும் உள்ளே போகிறார்கள்.) உட்காருங்கள் (ராஜன் உட்காருகிறான்.)

ராஜன் : எனது வருகை வியப்பைத்தருகிறது – இல்லையா?

நர்மதா : இயற்கைதானே!

ராஜன் : வந்து... நான்... வந்து...

நர்மதா : நீங்கள் வந்து... உட்கார்ந்து... இருக்கிறீர்கள் (சிரிக்கிறாள்.) மேலே சொல்லுங்கள்.

ராஜன் : நான் இங்கு வந்ததற்குக் காரணம்... காரணம்...

நர்மதா : சொன்னால்தானே தெரியும் (புன்னகை.)

ராஜன் : உங்களுடைய நடனங்கள் மிக மிக அருமை.

நர்மதா : நேற்றிரவு, அப்படித்தான் நீங்கள் சொன்னதாக நினைவு.

ராஜன் : ஆம் சொன்னேன்... வந்து...

நர்மதா : இருங்கள்... நானும்... வந்து விடுகிறேன். (எழுந்து செல்கிறாள்.)

ராஜன் : நான் வந்தது இடையூறாக இருக்குமானால்... (எழுந்திருக்கிறான்.)

நர்மதா : (முகமூடி எடுத்து வைத்தவள், திரும்பி நின்று) தொல்லையில்லை! இடையூறு ஒன்றுமில்லை. உட்காருங்கள். ஒரு நிமிடத்தில் வந்து விடுகிறேன். (சமையலறைக்குள் போகிறாள்.)

ராஜன் : நடையழகும்!... பின்னல்... சடையழகும்!
(நர்மதா, கையில் ஒரு கப் காபியுடன் வருகிறாள்.)

நர்மதா : காபி சாப்பிடுங்கள்!

ராஜன் : இப்பொழுதுதான் காபி சாப்பிட்டேன்.

நர்மதா : எங்கே?

ராஜன் : ஆனந்த பவனில்.

நர்மதா : இது வீட்டில் செய்யப்பட்டது. நானே செய்தது சாப்பிடுங்கள்.

ராஜன் : சரி! சாப்பிடுகிறேன். (ருசி பார்க்கிறன்.)

நர்மதா : ஏன், எப்படியிருக்கிறது?

ராஜன் : அழகாயிருக்கிறது.

நர்மதா : அழகா? (முகத்தில் வியப்பும் வருத்தமும் தோன்ற அழகாக இருக்கிறது - ஆனல் - ருசியாக இல்லையாக்கும்?

ராஜன் : அப்படியல்ல! நாவுக்கு ருசியாக இருக்கிறது? கண்ணுக்கும் அழகாயிருக்கிறது! காதுக்கும் இனிமையாக இருக்கிறது! கருத்துக்கும் விருந்தாக இருக்கிறது!

நர்மதா : காபியா? (ஆச்சரியத்துடன்.)

ராஜன் : உங்கள் காபி நாவுக்கு ருசி! உங்கள் தோற்றம் கண்ணுக்கு அழகு! உங்கள் பேச்சு காதுக்கு இனிமை! உங்கள் பார்வை கருத்துக்கு விருந்து!

நர்மதா : நீங்கள் ஒரு வசனகர்த்தாவோ?

ராஜன் : இல்லை! நான் வசனகர்த்தாவுமல்ல! நடிகனுமல்ல!

நர்மதா : நீங்கள் யார்?

ராஜன் : நான்... என்பெயர் ராஜன். ராஜு என்றும் அழைப்பார்கள்.

நர்மதா : எந்த ஊர்?

ராஜன் : புதுக்கோட்டை.

நர்மதா : தொழில்?

ராஜன் : நான் தொழிலாளியல்ல.

நர்மதா : முதலாளியோ?

ராஜன் : முதலாளியுமல்ல.

நர்மதா : உத்தியோகஸ்தரோ?

ராஜன் : உத்தியோகஸ்தனுமல்ல.

நர்மதா : தொழிலாளியல்ல! முதலாளியுமல்ல! உத்தியோகஸ்தருமல்ல! அப்படியானல் R. K. D. டிபார்ட்மெண்டோ?

**ராஜன் :** R. K. D. யா !

**நர்மதா :** ரைஸ் கில்லிங் டிபார்ட்மெண்ட்.

**ராஜன் :** (புன்னகையுடன்) ஓ ! அதுவா... இல்லையில்லை ! தண்டச் சோற்றைத் தின்றுவிட்டு ஊர் சுற்றி அலையும் கூட்டத்தைச்சேர்ந்தவனல்ல நான் — என் தந்தை ஒரு லட்சப் பிரபு; அவருக்கு நான் ஒரே பிள்ளை. B. A. பட்டம் பெற்றிருக்கிறேன். என் தந்தை பெரிய வியாபாரி. இந்த ஊரிலும் எங்களுக்குச் சொந்தமான கடைகளும் வீடுகளும் உண்டு. வயல்கள், தோப்புகள், முந்திரிக்காடுகள் எல்லாம் உண்டு.

**நர்மதா :** குணம் ?

**ராஜன் :** குணம் ! (புன்னகையுடன்) தங்களைத்தாங்களே கெட்டவர்களென்று யாரும் சொல்லிக் கொள்வதில்லையே ! ஒருவரிடம் குணம் உண்டா இல்லையா என்பதைப் பிறர்தான் சொல்லவேண்டும்.

**நர்மதா :** உண்மைதான். மனையாள் ?

**ராஜன் :** மணமா ?

**நர்ம :** விளங்கவில்லையா ? உங்கள் மனைவியின் பெயர் என்ன என்று கேட்கிறேன்.

**ராஜன் :** அதுவா ?...... (சிரிக்கிறான்)......சொல்லமுடியாது !

**நர்ம :** முடியாதா ! ஏன் ? கணவன் பெயரைச் சொல்லாத கன்னியர் நம் நாட்டில் உண்டு. ஆனால் தன் மனைவியின் பெயரைச் சொல்லாத கணவரைப் பற்றி இதுவரை நான் கேள்விப்பட்டதில்லை.

**ராஜன் :** எனக்கு இன்னும் மணமாகவில்லை !

**நர்மதா :** ஓ !... அப்படியா ? (முகம் நாணத்தால் சிவக்கிறது)

**ராஜன் :** நீங்கள் ?

**நர்மதா :** நானும் அப்படியேதான் ! நீங்கள் இங்கு வந்த காரணத்தைச் சொல்ல ஆரம்பித்தீர்கள். ஆனால் சொல்லி முடிக்கவில்லையே !

**ராஜன் :** உங்களை விருந்துக்கு அழைக்க வந்தேன்.

**நர்மதா :** விருந்தா ?

**ராஜன் :** வேறொன்றுமில்லை—நேற்றிரவு நீங்கள் கலைவிருந்தளித்தீர்கள். நன்றியின் அறிகுறியாக, உங்களுக்கும் உங்கள் நடனக் குழுவினருக்கும் ஒரு உணவு விருந்து கொடுக்க விரும்பினேன். இன்று பிற்பகல் 12-30 மணிக்கு ஆனந்த பவனில் விருந்து ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது— நீங்கள், தவறாமல் வந்து சேரவேண்டும்.

**நர்மதா :** எங்கள் குழுவினர்மீது உங்களுக்கு இவ்வளவு அன்பு ஏற்பட்டதற்கு மிக்க நன்றி.

**ராஜன் :** ஆனால், உண்மை அதுவல்ல. உண்மையைச் சொல்லவா ?

**நர்மதா :** சொல்லுங்களேன்.

**ராஜன் :** நர்மதா தேவிக்குத்தான் விருந்து! மற்றவர்களை அழைத்திருப்பது ஒப்புதலுக்காக.

**நர்மதா :** அப்படியா ? மிக்க நன்றி.

**ராஜன் :** (எழுந்திருக்கிறான்) போய் வரட்டுமா ?

**நர்மதா :** போய் வாருங்கள். வணக்கம் !

**ராஜன் :** வணக்கம் ! [வெளியே போய்விட்டுத் திரும்பி வருகிறான்]. மன்னிக்கவேண்டும் ! என் கைக்குட்டையை......

**நர்மதா :** இதோ ! [மேஜை மீதிருந்த கைக்குட்டையை எடுத்துக்கொடுக்கிறாள். கைக்குட்டையோடு அவளது கையும் அவனது கையில் பிடிபடுகிறது. அவள், தன் கையை விடுவித்துக்கொள்ள முயற்சி செய்யவில்லை. அதே நிலையில் சில விநாடிகள். நர்மதாவின் முகம் நாணத்தால் சிவக்கிறது—தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொள்கிறாள்].

**ராஜன் :** நர்மதா !

**நர்மதா :** ஊம்... (முகம் அவன் பக்கமாகச் சற்றே திரும்புகிறது).

**ராஜன் :** அன்பே ! (நர்மதாவின் முகம் அவன் முகத்தை நோக்குகிறது). கண்ணே ! (இருவருடைய கண்களிலும் காதல் பார்வை ! இமைகள் பாதியளவு மூடுகின்றன. ராஜன் நர்மதாவை ஒரு கையால் அணைத்துக்கொண்டு, மற்றொரு கையால் அவளது முகத்தைத் தன் முகத்துக்கு நேராகத் தூக்குகிறான். முகங்கள் நெருங்குகின்றன. உதடுகள் துடிக்கின்றன, நர்மதாவின் மார்பு மேலே எழுந்து எழுந்து தணிகிறது).
என் ஆருயிரே !

**நர்மதா :** அன்பே! (அவனுடைய பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளுகிறாள்).

**ராஜன் :** நர்மதா !

**நர்மதா :** ஏன் ?

**ராஜன் :** இனி உன்னைவிட்டு ஒரு கணமும் பிரியேன்.

**நர்மதா :** பிரிந்தால்...

**ராஜன் :** உயிர் தரியேன் !

**நர்மதா :** ஓ!... சரி! நீங்கள் போய்விட்டு வாருங்கள் (புன்னகை)

**ராஜன் :** எப்பொழுதுமா ?

**நர்மதா :** (சற்று யோசித்து) இன்று மாலை – காவிரிக் கரைக்குப் போகலாமா ?

## காட்சி – 27.

[இடம் : பாலனின் அறை.

**பாத்திரங்கள் :** பாலனும் அவனது நண்பன் கோபுவும்.]

**கோபு :** பாலா ! என்ன ? ஆழ்ந்த யோசனை ? கப்பல் ஏதாவது கவிழ்ந்து போச்சோ ?

**பாலன் :** கப்பல் கவிழ்ந்து கொண்டுதானிருக்கிறது.

**கோபு :** எந்தக் கப்பலப்பா ?

**பாலன் :** என் வாழ்க்கைக் கப்பல் ! கிளி பறந்து விட்டது !

**கோபு :** கிளியா ? எந்தக்கிளி ?

**பாலன் :** என் பச்சைக்கிளி ! பவளவாய்க்கிளி ? வித்தாரம் கூறும் கிளி ! வீணை நாதம் பேசும் கிளி ! பாடும் கிளி ! அது, ஆடும் கிளி ! நர்மதா என்னும் நடனக்கிளி !

**கோபு :** சரிதான் ! நர்மதா தேவியை வர்ணிக்கிறாயாக்கும் !

**பாலன் :** ஆம் ! அந்தச் சுந்தரிதான். காத்திருந்தவன் நான் ! நேற்றுவந்தவன் அவன் ! அவள் சிந்தை அவன் மீது சென்றது ஒரு விந்தை ! நாளை கனியும் இன்று கனியும் என்று ஏங்கிக்கிடந்தேன் அந்தப் பெண்கனிக்கு, என்

கண்ணைவ கவிய தனே, விண்ணதிலே பறந்து வந்து, தின்னவந்த வெளவாலே என்ன செய்தால் தீரும்! தொலேத் துக்கட்டுவேன் அவனே. தோட்டக்காரன் ஊட்டி வளர்த்த பெண்மானே வேட்டைக்காரன் தூக்கிச் செல்வதா! ஒருக் காலும் அவர்கள் காதலே அனுமதியேன். நான் வில்லனுக மாறுவேன்.

**கோபு :** வில்லனின் முடிவுதான் தெரிஞ்ச முடிவாச்சே!

**பாலன் :** நண்பனே! கதைகளில் வரும் வில்லன் வேறு, வாழ்க் கையில் வரும் வில்லன் வேறு. வில்லனே கதாநாயகன் ஆன கட்டங்கள் நம்நாட்டுச் சரித்திரத்திலே உண்டு!

**கோபு :** அவன் என்று நீ சொல்வது யாரெ?

**பாலன் :** ஆனந்தபவனிலே, விருந்து வச்சானே - அவன்தான்! நமக்காகவா விருந்து வச்சான்! அவளுக்காகத்தான் விருந்து வச்சான்!

**கோபு :** ஓ! ராஜனு?

**பாலன் :** அவன்தான்!

**கோபு :** என்னப்பா அது - விருந்து வச்சதனுலே அவன் அவ ளுடைய காதலன்னு எப்படிச் சொல்லமுடியும்?

**பாலன் :** கோபு! என் கண்களே உன் கண்களிலே வச்சுப் பார்த்திருந்தா அப்பத் தெரிஞ்சிருக்கும் உனக்கு-அவர்கள் காதலர்கள்தான்னு அவள் முகம் அவன் பேசினுல் அன் றலர்ந்த தாமரையாகும்! நான் பேசினுல் சந்திரனேக்கண்ட தாமரையாகும். கதையை நீட்டுவானேன். அவள் மனம் அவனேயே நாடுகிறது.

**கோபு :** இருந்தாலும், நிச்சயமா எப்படிச் சொல்ல முடியும்?

**பாலன் :** அவர்கள் உறவைப்பற்றித் துப்பறிஞ்சேன். சீப்பு - சோப்பு - கண்ணுடி வியாபாரியாக வேஷம் போட்டேன். நர்மதா வீட்டின் எதிரிலே கடைபோட்டு உட்கார்ந்தேன். மாலே 6 மணிக்கு ராஜன் ஒரு காரிலே வந்தான். அவ அறைக்குள்ளே போனுன். கொஞ்ச நேரத்திலே ரெண்டு பேரும் வெளியே வந்து காரிலே ஏறிட்டுப் போனுங்க - போதுமா? அவங்க காதலர்களாயிட்டாங்கன்னு தெரி யிலெ?

**கோபு :** அது சரி - அவதான் அவனேக் காதலிக்கிருள்னு சொல்றே. அப்படியானு நீ ஏனப்பா அவளெ நெனச்சிக் கிட்டிருக்றெ?

**பாலன் :** கோபு ! அவ எனக்கு வேணும். அதுனலெதான் நான் அவளெக் காதலிக்றேன்.

**கோபு :** இது காதலே அல்ல பாலா ! இதுதான் மூருதலேக் காமம்னு சொல்றது.

**பாலன் :** மூருதலேக் காமமோ, ரெண்டுதலேக் காமமோ, அதெப் பற்றிக் கவலேயில்லெ, அவ எனக்கு வேணும் ! அவ்வளவுதான்.

**கோபு :** நீ அவளெக் காதலிக்கிற ஸங்கதி அவளுக்குத் தெரியுமா ?

**பாலன் :** தெரியுந் தெரியும் !

**கோபு :** எப்படி ?

**பாலன் :** "கண்ணே ! நர்மதா ! உன்னே என் உயிரிலும் மேலாக எண்ணிக் காதலிக்கிறேன்! என்னே மணந்துகொள்! உன்னே என் இதயகமலத்தில் வைத்துப் பூசிக்கிறேன்" — என்றெல்லாம் அவளிடம் ஒரு நாள் சொன்னேனப்பா !

**கோபு :** அப்படியா ? அவ என்ன சொன்னு ?

**பாலன் :** அவளா ?... "என் மனசிலே காதல் இன்னும் முளேக்கிலெ. அது முளேக்கும்போது சொல்லியனுப்றேன்" — அப்படீன்னு சொன்னு.

**கோபு :** குறும்புக்காரி ! பாலா ! அவளெ மறந்துடு.

**பாலன் :** அட போப்பா ! அவ குறும்புக்காரியா இருக்றது னுலதான் அவளே மறக்க முடியலே என்னுலெ — கோபு ! அவளெ நான் அடஞ்சே தீருவேன் !

**கோபு :** என்னமோப்பா, நிதானமா நடந்துக்கோ. நான் வரேன். (போகிருன்)

**பாலன் :** ( கோபு மறைந்தபின் ) ஆம் ! நிதானமாகத்தான் நடந்துகொள்ளப் போகிறேன். திட்டமிட்டு வேலேசெய்யப் போகிறேன்.

## காட்சி – 28

[இடம் : காவேரிக்கரை : மணல்மேடை.
பாத்திரங்கள் : ராஜனும் நர்மதாவும் ]

ராஜன் : நர்மதா ?

நர்மதா : ஏன் ?

ராஜன்: பேசாமல் உட்கார்ந்திருக்கிறயே! ஆழ்ந்த யோசனையில்!

நர்மதா : வேருென்றுமில்லை. " உங்களுக்கும் எனக்கும் எத்தூரம் ! " என்று யோசனை செய்துகொண்டிருந்தேன்.

ராஜன் : (எழுந்து சென்று அவள் அருகில் உட்கார்ந்து) நீதானே, தூரமாகப்போய் உட்கார்ந்துகொண்டாய்.

நர்மதா : இந்த தூரத்லதயல்ல, நான் சொன்னது.

ராஜன் : பின் எந்த தூரத்தை ?

நர்மதா : சமூகத்தில் எனக்கும் உங்களுக்கும் இடையில் உள்ள தூரத்தை.

ராஜன் : அப்படியென்ருல் ?

நர்மதா : நீங்கள் பணக்காரர்; நான் ஏழை.

ராஜன் : அதனுல் என்ன ?

நர்மதா : நம் காதல் வெற்றிபெறுமா என்று யோசிக்கிறேன்.

ராஜன் : நம் காதல் வெற்றிபெற நான் என்ன செய்யவேண்டும் ? உன்னை முழு மனதுடன் காதலிக்கிறேனே !

நர்மதா : அது மட்டும் போதுமா ?

ராஜன் : வேறு என்ன வேண்டும் ?

நர்மதா : திருமணம் வேண்டும்.

ராஜன் : ( சிரித்துவிட்டு ) ஓ! இவ்வளவுதானு! என்ன சொல்லப் போகிருயோ என்று பயந்து விட்டேன். நாலைந்து நாட்களில் ஊருக்குப் போகிறேன். போனவுடன் என் பெற்ருேர்களிடம் சொல்லி நமது திருமணத்திற்கு ஏற்பாடு செய்கிறேன்.

**நர்மதா :** அவர்கள் சம்மதிக்காவிட்டால்!

**ராஜன் :** சம்மதிக்கமாட்டார்கள் என்று ஏன் நினைக்கிறாய்?

**நர்மதா :** நான் ஏழை என்ற காரணத்தால் – நடனமாது என்ற காரணத்தால்.

**ராஜன் :** அப்படியல்ல! என் பெற்றோர் சீர்திருத்த நோக்கமுடையவர்கள். ஜாதி, மத, பேதம் பாராட்டாதவர்கள். ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் பாராதவர்கள்.

**நர்மதா :** சீர்திருத்தம் பேசும் எத்தனையோ பேர், தமது சொந்த விஷயத்தைப் பொறுத்தவரை தமது கொள்கைகளைக் காற்றில் பறக்க விட்டுவிடுகிறார்களே! தங்கள் ஜாதிக்குள்ளே தானே மணம் செய்து கொள்ளுகிறார்கள்!

**ராஜன் :** இருக்கலாம்! ஆனால் என் பெற்றோர் அப்படிப்பட்டவர்கள் அல்ல. என் தந்தை வேறு சாதி! என் தாய் வேறு சாதி!

**நர்மதா :** உங்கள் தந்தை "ஆண்" சாதி! தாய் "பெண்" சாதி (புன்னகையுடன்).

**ராஜன் :** (சிரிப்பு) அதுவும் சரிதான்! என் தந்தை "பிள்ளை" சாதி! தாய் "நாயுடு" சாதி!

**நர்மதா :** நான் என்ன சாதியென்று சொல்லட்டுமா?

**ராஜன் :** நீ பெண் சாதி!

**நர்மதா :** நாடார் சாதி!

**ராஜன் :** நான்? "நாடும் சாதி"!

**நர்மதா :** அப்படியும் ஒரு சாதி உண்டோ?

**ராஜன் :** ஏன் இல்லை? (சற்று நெருங்கி உட்கார்ந்து அவள் தோளில் கையை வைத்தபடி) இதோ! உன்னை நாடுகிறேனே! அதனால் நான் "நாடும் சாதி" தானே!

**நர்மதா :** ஓ!... (சிரிக்கிறாள்)

**ராஜன் :** நர்மதா! என் வரலாற்றை நீ அறிந்தாய். உன் வரலாற்றை நான் அறியலாமா?

**நர்மதா :** என் வரலாறு? (சில வினாடிகள் மௌனம்) அது ஒரு சோகக்கதை. சிறுவயதில் தாயை இழந்தேன். பிறகு... (அவளது கண்களில் வழிந்த கண்ணீரை அவன் தன் கைக்குட்டையால் துடைக்கிறான்.)

**ராஜன் :** ஏன் அழுகிறாய் ?

**நர்மதா :** அழவில்லையே! பழைய நினைவுகள் ஒன்று சேர்ந்து உருகிக் கண்ணீர் வழியாக நீர்த் துளிகளாய் விழுந்திருக்கும்.

**ராஜன் :** நர்மதா! நீ கண்ணீர் விடுவதைக் காண நான் சகிக்கமாட்டேன். உன் சோகக் கதையை இப்போது சொல்லவேண்டாம். எங்கே, சிரி பார்க்கலாம்! சிரி! உன் முகத்தாமரை மலரட்டும்; எங்கே! (அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்புகிறான்)

(புன்னகை செய்கிறாள். துள்ளி யெழுந்து ஓடுகிறாள். அவன் அவள் பின்னே ஓடுகிறான், காவிரிக் கரைச்சோலையில் ஆடிப்பாடுகிறார்கள்)

பாட்டு (7)

நர்மதா :
எங்கிருந்தோ வந்த வண்டு
என் அழகு மலர் கண்டு
இன்பமான தேனை உண்ணுதே வெண்-நிலாவி-
இங்கு என்னை நாடி நின்றுருகுதே [னிலே
ஓ...........! ஓ.........! ஓ...........!
— (ஏங்கிருந்தோ)

ராஜன் :
குயில் போலக்கூவி நின்று
மயில் போல மங்கை ஒன்று
ஒயிலாக ஆடுகின்றதே வெண் நிலாவி-னிலே
உள்ளம் அதை நாடுகின்றதே
ஆ........! ஆ........! ஆ.........! —
(குயில்போல)

நர்மதா :
பா...லும் தே...னும் கலந்...தா—நல்ல
பாலு...ம் தேனும் கலந்தா— இன்பப்
பலா...வும் நல்...லும் இணைந்...தா—எந்தன்
வண்...ணக் கிளியை நினைந்தேன்— இங்கு
வா......வா... ..வாவென் றழைத்தேன்— (பாலும்)

ராஜன் :
சே...லும் வே...லும் மலைந்...தா—உன்கண்
சே...லும் வே...லும் மலைந்...தா— உன்வாய்
செல்வத் தமிழ்ச்சொல் மொழிந்தா—என்னை
வண்...ணக் கிளியென் றழைத்தாய்—வந்தேன்
பார்-பார்-பாரென் மனத்தாய்— (சேலும்)

(நர்மதா ஓடி மறைந்து நின்று)

ராஜன் : காதுக் கினிய கானம் நீ—எந்தன்
காதுக் கினிய நல் கானம் நீ

நர்மதா : கானம் விளைந்திடும் வீணை நீர்! — உயர்
கானம் விளைந்திடும் வீணை நீர்

ராஜன் : காதல் வெள்ளத்தினில் மூழ்குவோம்

நர்மதா : கண்ணும் கண்ணும் இணைபேசுவோம்

ராஜன் : என் ராணி நீ!

நர்மதா : என் ராஜன் நீர்!

(இருவருடைய முகங்களும் ஒன்று சேருகின்றன)

ராஜன் : *கண்ணே!*

நர்மதா : *அன்பே!*

ராஜன் : *ஏன் நடுங்குகிறாய்?*

நர்மதா : *அச்சத்தினால்!*

ராஜன் : *அப்படியானால் என்னோடு வர ஏன் துணிந்தாய்?*

நர்மதா : *மடத்தினால்!*

ராஜன் : *அப்படியானால் முகத்தை ஏன் அப்புறம் திருப்பிக் கொள்ளுகிறாய்?*

நர்மதா : *நாணத்தால்!*

ராஜன் : *நான் உன்னைப் பார்க்கும்போது உன் கண்கள் வேறு பக்கம் பார்க்கின்றன. உன்னைப் பாராதபோது என்னை நோக்குகின்றன, அது எதனால்?*

நர்மதா : *பயிர்ப்பினால்!*

ராஜன் : *அச்சம்! மடம்! நாணம்! பயிர்ப்பு!*

நர்மதா : *பெண்களின் குணங்கள்தானே*

ராஜன் : *இல்லை! உன்னைப்போன்ற பெண்ணரசியின் படைகள் அவை! நாற்குணமும் நாற்படைகள்!*

நர்மதா : *நீங்கள் சொல்லுவது புகழேந்தியின் காவியத்தில்!*

ராஜன் : இல்லை! என்முன் காணும் உயிர் ஓவியத்தில்! என்ன யோசிக்கிறாய்?

நர்மதா : ஒன்றுமில்லை! அதோ முழுமதி!

ராஜன் : அது களங்கமுடையது! உன் முகமதி களங்க மற்றது?

நர்மதா : அதோ! கரியமேகம்!

ராஜன் : அதற்கு மலர்சூடி மணம் வீசத்தெரியாது?

நர்மதா : அழகான மயில் பாருங்கள்!

ராஜன் : அதற்கு ஆடத்தான் தெரியும். உன்னைப்போல் பாடத் தான் தெரியுமா?

நர்மதா : அழகுநடை அன்னம் பாருங்கள்.

ராஜன் : அதற்கு நடைதான் தெரியும். இதற்கு நடனமும் தெரியும்.

நர்மதா : அங்கே பாருங்கள் செந்தாமரை!

ராஜன் : அது பகலில்தான் மலரும். இது இரவிலும் மலருமே!

நர்மதா : நீங்கள் காவியம் பேசுகிறீர்கள்.

ராஜன் : என்னைப் பேசவைப்பது நீதான் கண்ணே!

## காட்சி – 29.

[இடம் : காளிகோயில்— (ஒரு பெண் உட்கார்ந்தபடி தலை விரித்து ஆடுகிறாள்.)

பாத்திரங்கள் : பூசாரியும், அவளது பெற்றோரும் மற்றவர்களும்.]

பாட்டு (8)

பூசாரி : (உடுக்கை அடிக்கிறான்)

பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்

ஓங்காரக் காளி நீ! ஒலகமெலாம் பெற்றவள் நீ!
(பிம்பிம்பிம்......பிம்பிம்பிம்)

சங்கரி நீ துர்க்கை நீ! சகலகலை வல்லவள் நீ!
(பிம்பிம்பிம்......பிம்பிம்பிம்)

ஆயிரங்கண் படைத்தவளே! அகிலாண்ட நாயகியே!
(பிம்பிம்பிம்......பிம்பிம்பிம்)

தாயிரங்கி இப்போதே தவறாமல் வந்திடுவாய்!
(பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்)

(பூசாரி விபூதி மந்திரித்து எடுத்துப் பெண்ணின்மீது வீசுகிறான்)

பெண் : பொன்ணுளே விட்டுப் போகமாட்டேன்
(பிம்பிம்பீம்...பிம்பீம்...பிம்பிம்)

இந்தப் பொன்ணுளே விட்டுப் போகமாட்டேன்—
(பிம்பிம்பிம்...பிம்பீம்...பிம்பிம்)

பூசாரீ—பூசாரீ—இந்தப்
பொன்ணுளே விட்டுப் போகமாட்டேன்
(பிம்பிம்பிம்...பிம்பிம்...பிம்பிம்)

பூசாரி : கன்னி யான பொண்ணிவளே—தம்பீ (பிம்பிம்பிம்)

கன்னி யான பொண்ணிவளே—நீ
கைப்புடிக்க நாய மில்லே (பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்)

பெண் : என்னதான் நீ சொன்ணுலுமே—அண்ணு (பிம்பிம்பிம்)
என்னதான் நீ சொன்ணுலுமே—நான்
இவளை விட்டுப் போகமாட்டேன்
(பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்)

பூசாரி : என்ன பேரு எந்த ஊரு—தம்பீ (பிம்பிம்பிம்)
என்னபேரு எந்த ஊரு—நீ
இங்கு வந்த சேதி கூறு (பிம்பிம்பிம்...பிம்பிம்பிம்)

பெண் : ஆத்தங் கரை யோரம் (பிம், பிம், பிம், பிம்)
அந்தியான வேளேயிலே (பிம், பிம், பிம், பிம்)
அரசமரத்தடியே (பிம், பிம், பிம், பிம்)
அருவாளால் வெட்டப்பட்டு—ஆவி துறந்திட்டேன்
ஆவி துறந்திட்டேன் (பிம்பிம், பிம்பிம், பிம்பிம்)

பூசாரி : ஆவி துறந்த பின்னே (பிம், பிம், பிம், பிம்)
அப்புறந்தான் நடந்த தென்னே (பிம், பிம், பிம், பிம்)
அத்தனேயும் ஒளிக்காமே (பிம், பிம், பிம், பிம்)
அப்படியே சொல்லு தம்பி—ஆடிவந்து சொல்லு தம்பி)
ஆடிவந்து சொல்லு தம்பீ (பிம்பிம், பிம்பிம், பிம்பிம்)

பெண் : புங்க மரத்தினிலே (பிம், பிம், பிம், பிம்)
பொன்னன் நாங் குடியிருந்தேன் (பிம், பிம் பிம், பிம்)
தங்கம்மா அங்கொரு நாள் (பிம், பிம், பிம், பிம்)
தனியாக வந்திட்டா—தாவிப் பிடித்திட்டேன்
தாவிப் பிடித்திட்டேன் (பிம்பிம், பிம்பிம், பிம்பிம்)

பூசாரி : அது சரி பொன்னப்பா! இத்தனெநாளா இந்தப் பொண்ணுக்கிட்டே இருந்ததுபோதும். •அவ கன்னிப் பொண்ணூ - கண்ணுலங்காச்சி ஆகவேணும் பாரு! நீ வேறெ எடம்பாத்துக்கொ பொன்னப்பா!

பெண் : பூசாரியண்ணு! என்னெப் போகச்சொல்றியே! (அழுகிறது.)

பூசாரி : நீ ஒண்ணும் வெசனப்படாதெ தம்பி! இந்தப் பொண்ணெ நந்தவுர உனக்கு வேறொருத்தி இல்லாமலா போச்சு? உனக்கு வேணுங்கிறதெக் கேளு - வாங்கிக்குடுக்கேம்.

பெண் : நான் போய்த்தான் நிரணுமா! அப்படியாணு...

கடலெ பொரி அவுலுப்பழம் வாங்கித்தா — நல்ல
கருங்கோழிக் கறியுங்கள்ளும் வாங்கித்தா, (பிம்பிம்பிம்-[3])

பூசாரி : இந்தாப்பா! நீ கேட்டதெல்லாம் தயாரா வச்சிருக்குது இந்தப் பொண்ணெ விட்டுட்டுப் போயிரு. காளியத்தா மேலே ஆணை - இனிமே இவகிட்ட நீ வரப்படாது. போற துக்கு அடையாளமா - ஓங்காரம் போட்டுட்டு - ரெண்டு தலைமயிரெக் குடுத்துட்டுப்போயிரு! (பெண் ஓங்காரம் போட்டு ஆடிவிட்டு, தன் தலைமயிரில் இரண்டைப்பிடித்துக் கொடுக்கிருள். பூசாரி அதை அரிவாளால் அருத்து ஒரு மரக்கட்டையுடன் சேர்த்து ஆணியடிக்கிருன். பெண் ஆட் டத்தை நிறுத்திவிட்டு, சுயநினைவுபெறுகிருள். தன் கூந்தலைத் தட்டி முடிந்துகொண்டு அந்த இடத்தைவிட்டு எழுகிருள்.)

பூசாரி : (பெண்ணின் பெற்ருேரைப்பார்த்து) பொன்னம்மா, இங் கே, காளி சன்னிதானத்திலே, ஒரு பத்து நாளைக்கு இருந்தா, எந்தப்பேயும் இனி அவளெப் பிடிக்காது, விட்டுட்டுப் போறிங்களா?

தாய் : இருக்கட்டுமே! பத்துநாளைக்குக் காளி கோயில்லியே இருக்கட்டும்.

## காட்சி – 30

[இடம் : பாலனின் அறை - மேஜையின் அருகே பாலன் நிற் கிருன் - மேஜையின்மேல் இருந்த ஒரு பிங்கான் தட்டில் ஒரு பொட்டலத்திலிருந்த பவுடரைக் கொட்டி அருகிலிருந்த பசைத் தண்ணீர்ப் புட்டியை எடுத்து அந்தப்பவுடர் இரண்டு மூன்று துளிகள் விட்டுப் பவுடரைக் கலக்குகிருன்.]

பாலன் : அந்தச்சாமியார் செய்தமாதிரி செய்து.........

## காட்சி – 31

[இடம் : ஒரு தையற்கடை.

**பாத்திரங்கள் :** கடைக்காரன், பாலன், வேறு மூன்று பேர்கள்.]

**சாமியார் :** (கடைக்குள் வந்து நின்று கொண்டு) அரோகரா! முருகா! (கடைக்காரனைப்பார்த்து) பழனியப்பா! உனக்கு முருகன் அருள் கிடைத்திருக்கிறது. பிரசாதம் வாங்கிக் கொள். உன் கையை நீட்டு! (கடைக்காரன் கையை நீட்டு கிறான். சாமியார் அவனுடைய முழங்கைக்கருகில் முளைத் திருந்த இரண்டு மூன்று மயிர்களைத் தன் இரு விரல்களால் வெடுக்கெனப் பிடுங்கித்தன் இரண்டு கைகளையும் கூப்பித் தலைக்குப் பின் பக்கமாகக் கொண்டுபோய்) முருகா! முருகா! வடிவேலா! பிரசாதம் கொண்டுவருவாய், உன் பக்தனுக்கு! முருகா! முருகா! முருகா! என்று கூறி விட்டு, கடைக்காரனுக்கும் அங்கிருந்தவர்கள் ஒவ்வொரு வருக்கும் கொஞ்சம் கொஞ்சமாகப் பொடித்துப்போடுகிறார். பாலன் மட்டும் திருநீறு வாங்கிக்கொள்ளவில்லை.)

**ஒருவன் :** என்னப்பா! அதிசயமா இருக்குதே! சாமியார் மயிரைத் திருநீறு ஆக்கிட்டாரே!

**மற்றவன் :** அவுருகிட்டே "சித்து" இருக்குமப்பா! பெரிய மஹான் போலெ இருக்குது.

**கடைக்காரன் :** டீ சாப்பிடறீங்களா சாமி!

**சாமி :** இந்தக்கட்டைக்கு டீயும் காப்பியும் எதற்கப்பனே!

**மூன்றுமவன் :** உட்காருங்க சாமி!

**சாமி :** இந்தக் கட்டை உட்கார்ந்தாலும் ஒன்றுதான், நின்றாலும் ஒன்றுதான்! (கடைக்காரனைப்பார்த்து) பழனியப்பா! இந்தக் கட்டை இரண்டணா காசு கேட்கிறது! கொடுக்குமா?

**கடைக் :** கொடுக்கிறேன் சாமி! (இரண்டணாக் கொடுக்கிறான்)

**சாமி :** (அசட்டைச்சிரிப்புடன்) இந்தக் கட்டைக்குக் காசு பணம் எதற்கு? உன் மனதைச் சோதிக்கவே கேட்டது. நீயே வைத்துக்கொள் பழனியப்பா! (2-வது ஆள்பக்கம் திரும்பி) இந்தப்பழனியப்பன் கையால் நாலணா வாங்கவேண்டுமென்று இந்தக்கட்டை ஆசைப்படுகிறது! கொடுக்குமா?

**2-வது ஆள் :** இந்தாங்க சாமி! (நாலணாப்பணம் கொடுக்கிறான்)

**சாமி :** இந்தப் பழனியப்பனுக்கு நல்லமனசு! (நாலணாவை வாங்கி உள்ளங்கையில் வைத்து அதைப்பார்த்தபடி) ஏ! நாலணாக்காசே! முருகன் அருள் பெற்ற கட்டைக்கு உன்னால் என்ன பலன்? பழனியப்பா! இந்தா நீயே வைத்துக் கொள். (கொடுத்து விடுகிறார்.)

(3-வது ஆளைப்பார்த்து) பழனியப்பா! உன் கையால் எட்டணா கொடுப்பாயா?

**3-வது ஆள் :** கொடுக்கிறேன் சாமி!

**சாமி :** ஒரு ரூபாய்?

**3-வது ஆள் :** கொடுக்கிறேன் சாமி! (ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக்கொடுக்கிறான்.)

**சாமி :** (நோட்டை வாங்கிக்கொண்டு) இந்தக் கடுதாசியை இந்தக் கட்டையே வைத்துக்கொள்ளலாமா?

**3-வது ஆள் :** வச்சுக்கோங்க சாமி!

**சாமி :** பிறகு விசனப்பட மாட்டாயே, பழனியப்பா?

**3-வது ஆள் :** அதெல்லாம் ஒண்ணும் விசனமில்லீங்கோ.

**சாமி :** நல்ல மனசு! நல்ல மனசு! நீயே வைத்துக்கொள் பழனியப்பா! (திருப்பிக் கொடுத்து விடுகிறார்.) (கடைக்காரன் பக்கம் திரும்பி) பழனியப்பா! உன் கையால் இக் கட்டைக்கு இரண்டு ரூபாய் கொடுக்குமா?

**கடைக் :** கொடுக்கிறேன் சாமி! (2 ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுக்கிறான்.)

**சாமி:** (அதை வாங்கிக்கொண்டு) நானே வைத்துக்கொள்ளட்டுமா?

**கடைக் :** வச்சுக்கோங்க சாமி!

**சாமி :** பழனியப்பனுக்குத் தங்கமான மனசு! தங்கமான மனசு! முருகன் உனக்கு அருள்புரிவான். நான் வருகிறேன். (வெளியே போய்விடுகிறார்) (பாலன் சாமியாரைப் பின் தொடர்ந்து போகிறான்.)

**பாலன் :** சாமி!

**சாமி :** பழனியப்பன் யாரோ?

**பாலன் :** உங்கள் மகிமையைக் கண்டேன் சாமி! என் பின்னால் வாருங்கள் ஒரு முக்கியமான விஷயம்! (சாமியார் பின் தொடர பாலன் முன்னே செல்கிறான்.)

## காட்சி – 32

[இடம்: பாலனின் அறை – சாமியாரை உள்ளே விட்டு பாலன் உட்பக்கமாகக் கதவைப் பூட்டி விடுகிறான்.]

**பாலன்:** எய்! பரதேசிப்பயலே! அந்த 2 ரூபாய் நோட்டை எடுத்து மேஜை மேலேவை.

**சாமி:** பழனியப்பா! (விழிக்கிறார்.)

**பாலன்:** ஏய்! பரதேசி! இங்கே பழனியப்பனுமில்லெ! மதுரை வீரனுமில்லெ! ஊம்! சொன்னபடி செய்யிறயா இல்லே... (சவுக்கை எடுக்கிறான்.)

**சாமி:** பகல் கொள்ளையோ பழனியப்பா? (நடுங்கிக்கொண்டே கேட்கிறார்.)

**பாலன்:** ஆ...மா... பழனியப்பா! ஊம்! எடுத்துவை!

**சாமி:** முருகா! முருகா! (நோட்டை மேஜைமேல் வைக்கிறார்.)

**பாலன்:** ஏய் பரதேசி! எங்கிட்டெ உண்மையெ ஒளிக்காமெச் சொன்னேன்னு அந்த ரெண்டு ரூபா நோட்டு உன்னைச் சேர்ந்தது. திருநீறு கொடுத்தயே... தையற்கடையிலே... அதனுட ரகசியமென்ன?

**சாமி:** இதில் ரகசியமென்ன இருக்கிறது? முருகன் கொண்டு வந்து கொடுத்தார்.

**பாலன்:** முருகன் கொடுத்தாரு?... கொடுப்பான்! கொடுப்பான்! ஏய்! போலிச்சாமியாரே! உண்மையைச் சொல்ல மாட்டே?

**சாமி:** இந்தக்கட்டை பொய் பேசுவதற்கு அவசியமென்ன இருக்கிறது?

**பாலன்:** இருக்காது! இருக்காது! எங்கே அந்தப் பிரசாதத்தை எனக்குக்கொடு பார்க்கலாம்.

**சாமி:** முருகன் பிரசாதத்தை பயமுறுத்தி வாங்க முடியுமா?

**பாலன்:** முடியுமா, முடியாதான்னு பார்க்கத்தானே போறேன்

(அடிப்பதற்குச் சவுக்கை ஓங்குகிறான்.)

**சாமி:** அடிக்கவேண்டாம் அப்பனே! அடிக்கவேண்டாம்!

**பாலன் :** உண்மையைச் சொல்லிவிடு அப்பனே! உண்மையைச் சொல்லிவிடு. ஏய்! போலி! ஜாக்கிரதை! அதோ, அந்த அறைக்குள்ளே போய்ட்டு ரெண்டு நிமிஷங்கழிச்சுத் திரும்பி வருவேன். பிரசாதம் அதுக்குள்ளே தயாராய் இருக்கு வேணும். இல்லே! தோலை உரிச்சிடுவேன் – தோலெ. (அடுத்த அறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டு, திறவு கோல் வழியாகப் பார்க்கிறான். கோவணத்திலிருந்த இரகசியப்பையிலிருந்து, ஒரு உருண்டையை சாமியார் வெளியே எடுக்கிறார். தனது இடது கையின் இரண்டாம் மூன்றும் விரல்களுக்கு இடையே வைத்து மறைக்கிறார். பாலன் அதைப்பார்த்து விடுகிறான். கதவைத்திறந்து கொண்டு சாமியாரிடம் வருகிறான்.)

**பாலன் :** என்ன, சாமியாரே! பிரசாதம் தயாரா?

**சாமி :** முருகன் அருள் புரிவான்!

**பாலன் :** அப்படியா? எங்கே (கையை நீட்டுகிறான்.)

**சாமி :** (தன் கைகள் இரண்டையும் தலைக்குமேல் தூக்கிப் பிடரியின் பக்கமாகக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு) முருகா! முருகா! வடிவேலா! அருள்வாயப்பா! (பாலனின் கையில் திருநீற்றைப் பொடித்து விடுகிறான்.)

**பாலன் :** பலே! பலே! நீ பலே கெட்டிக்காரனப்பா! எங்கே இன்னொருதடவை கொடு பார்க்கலாம்! (சாமியார் விழிக்கிறான்) சும்மா எடுத்துக்கொடப்பா!

**சாமி :** எடுத்துக் கொடுக்கவா? (ஆச்சரியத்தில் வாய்திறந்தபடி பாலன் முகத்தைப்பார்க்கிறான்.)

**பாலன் :** (கலகலவென்று சிரிக்கிறான்) ஏய்! பரதேசி! கோவணத்திலே இருந்து அதை எடுத்தயே! அப்போ நான் பார்த்துக் கிட்டுத்தானே இருந்தேன். அதோ! அந்தக் கதவிலிருக்ற திறவுகோல் நுழையும் துவாரத்து வழியா! திருட்டுப்பயெ! ஊரை ஏமாத்திப்பொழைக்றான்! உன்னெப் போலிஸிலே ஒப்படைக்றேன் பாரு! (டெலிபோன் கருவியைக்கையில் எடுக்கப்போகிறான்.)

**சாமி :** (நடுங்கிக்கொண்டே) ஐயா! சாமி! என்னை ஒண்ணும் பண்ணுதிங்க. உண்மையெச் சொல்லிப்போட்றேன். என்னைப் போலிஸிலே ஒப்படைச்சிருதிங்க! நான புள்ளெகுட்டியில்லாதவனுங்க! இன்னங் கலியாணங்கூடப்பண்ணலிங்க! என்னெக்கொண்டுபோய் ஜெயிலிலே போட்டுடாதீங்க!

**பாலன் :** ஊம்! உண்மையை ஒளிக்காமல் சொல்!

**சாமி :** சொல்லிப் போட்றனுங்க! சொல்லிப் போட்றனுங்க!

**பாலன் :** சீக்கிரம் சொல்!

**சாமி :** சொல்றனுங்க! வேலைவெட்டி ஒண்ணும் இல்லிங்களா?

**பாலன் :** எனக்கா?

**சாமி :** இல்லீங்க! எனக்குங்க! எனக்கு வேலைவெட்டி ஒண்ணுமில்லிங்களா? எத்தனை நாளாத்தான் பட்டினியாக் கிடக்குறதுங்க? அதுனுலே...

**பாலன் :** அதுனுலே?

**சாமி :** இந்த வயித்தெ வளக்றதுக்கு இப்படி வேலை ஆரம்பிச்சுட்டனுங்கோ! இதொ பாருங்க (கோவணத்தின் பையிலிருந்து சில திருநீற்று உருண்டைகளை எடுத்து மேஜை மீது வைக்கிருன்.)

**பாலன் :** அப்படிவா வழிக்கு! செந்தமிழ் பேசறயோ! செந்தமிழ்!

**சாமி :** என்ன செய்யிறதுங்க! வேஷத்துக்குத் தகுந்த மாதிரி பேச வேணுங்ளே.

**பாலன் :** (ஒரு உருண்டையை எடுத்து சாமியார் செய்தமாதிரி செய்கிருன்) முருகா! முருகா! வடிவேலா! மொட்டையாண்டீ! அருள்வாய்! உன் பக்தனுக்குத் திருநீறுப் பிரசாதம் அருள்வாய்! (பரதேசியைப்பார்த்து) பழனியப்பா! உன் கையை நீட்டு! (பரதேசி கையை ஏந்துகிருன். பாலன் திருநீற்று உருண்டையை பொடித்து விடுகிருன்) இப்படித் தானே பழனியப்பா?

**சாமி :** ஆமாங்க!

**பாலன் :** ஆமா! எல்லாத்தையும் பழனியப்பாங்கிறயே அதென்னசங்கதி?

**சாமி :** அது வேதாந்தமுங்க!

**பாலன் :** ஓ! அதென்ன வேதாந்தமப்பா?

**சாமி :** "சர்வம் ஜகத் மயம்!"

**பாலன் :** அடே! சமஸ்கிருதங்கூடத் தெரியுமா உனக்கு.

சாமி : (பல்லே இளிக்கிறன்) இல்லீங்க – சும்மா – அப்படியே... ரெண்டொரு வார்த்தெயெ வெச்சுகிட்டு – அடிச்சுத்தள்றது தானுங்க – எத்தனேயோபேர் செய்யருப்லே.

பாலன் : அப்புறம்? சர்வம் ஜகத்மயம்! அதனுலே!...

சாமி : அதுனுலே, எல்லாம் கடவுள் மயம். அதுனுலே எல்லாம் பழனியப்பன் மயம்! அதுனுலெ எல்லாரையும் பழனி யப்பண்ணு சொன்னு, அதுதானுங்க வேதாந்தம்!

பாலன் : ஓ! நீ பெரிய ஆளப்பா!

சாமி : (புன்னகை செய்து) என்ன செய்றதுங்க!

பாலன் : அதிருக்கட்டும்! திருநீற்றை எப்படியப்பா உருண் டை செய்தே?

சாமி : கொஞ்சம் பசைத்தண்ணி சேர்த்துத்தானுங்க.

பாலன் : ஓ! அப்படியா? சரி! நீ போகலாம். உலகத்திலே எத்தனேயோ திருட்டுப்பசங்க எத்தனேயோ வழியிலே திருட ரானுக. அதிலெ நீ ஒருவகை. பொளேக்கத் தெரிஞ்சவன் நீ! ஊ... ம்! போ! போ! உன்னுலெ ஏமாத்தப்பட்ற துக்கு எத்தனேயோபேர் காத்துகிட்டிருக்ருங்க போ! பக்தி யின் போர்வையிலே நுழைஞ்சுகிட்டுக் கொள்ளேயடிக்கிற ஆசாமிகளிலே நீ ஒருத்தன். நம்ம அப்பாவி ஜனங்களெ ஏமாத்றதுக்கு உன்னுட சாமர்த்தியத்திலே ஒரு கால்பங்கு இருந்தாக்கூடப்போதும். போ! பழனியப்பா, போ! (கதவைத்திறந்து விடுகிறன். சாமியார் மேஜைப்பக்கம் பார்த்துப் பார்த்துப் பல்லே இளிக்கிறன்) ஓ! அந்த ரூபாய் நோட்டைப் பார்க்கிறயாக்கும்! எடுத்துக்கொள் அப்பனே! எடுத்துக்கொள்! நீ பாடுபட்டுச் சம்பாதித்த பணமல்லவா! எடுத்துக்கொள் (சாமியார் பணத்தை எடுத்துக் கோவணத் துக்குள் சொருகி வைத்துக்கொண்டு போகிறன்) உன் பேர் என்னப்பா?

சாமி : கந்தசாமிங்க!

பாலன் : ஓ! முருகக்கடவுள் பேர்தான்! நல்ல பொருத்தமாப் போச்சு! பேருக்கு முருகன்! பிழைப்புக்கு வஞ்சகம்! பேச்சுக்குச் செந்தமிழ்! போயிட்டு வாங்க சாமியாரே! போயிட்டுவாங்க (கந்தசாமி போகிறன் – திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே.)

## காட்சி – 33 (31-ன் தொடர்ச்சி)

[இடம்: பாலனின் அறை: பாலன் மேஜையின் முன் நின்று கொண்டிருக்கிறான்.]

**பாலன்:** திருநீற்றுக்குப் பதிலாக இந்த விஷப்பொடியை உருண்டை செய்து கையாளவேண்டும் – அவ்வளவுதான் – வெற்றி நமக்கு! அவனை ஒழித்துக் கட்டிவிட்டால் – அந்தப் பைங்கிளி எனக்குக் கிடைத்து விடுவாள் – (நர்மதாவின் மாயத் தோற்றத்தைக் கட்டி அணைக்கிறான். ஏமாற்றமடைகிறான்) நர்மதா! உன்னை அடைந்தே தீருவேன்!

## காட்சி – 34

[இடம்: காளிகோயில் – பூசாரியும், பாலனும். நந்தவனத்தில் ஒரு கற்பலகையின் மீது பாலன் உட்கார்ந்திருக்கிறான். பூசாரி நின்றுகொண்டிருக்கிறான்.]

**பாலன்:** வீரப்பன் உன்னைப்பற்றிப் புகழ்ந்து சொன்னனப்பா – அதனாலதான் உன்னெப்பாத்துட்டுப் போலாம்னுவந்தேன்.

**பூசாரி:** வீரப்பனுங்களா? அவனுக்கு ரெண்டு மூணு சமயத்திலே ஒதவி செய்திருக்கறனுங்க (பல்லை இளிக்கிறான்)... நம்மகாரியம்?......

**பாலன்:** (பூசாரியை அருகில் அழைத்து 5 ரூபாய் நோட்டு ஒன்றைக்கொடுத்து) பூசாரி! இதெ "அட்வான்ஸா" வெச்சுக்கோ. (அவன் காதில் ஏதோ இரகசியம் சொல்லுகிறான். பிறகு) இரண்டு மூணு நாளைக்கு இங்கே இருக்கணும் – அதுக்கு நீதான் ஒதவிசெய்யணும் – தெரியுதா?

**பூசாரி:** அதுக்கென்னங்கோ! அப்பிடியே செய்யலாமுங்க! இது தனி எடமுங்கோ! ராத்திரி வேளையிலே ஒரு குஞ்சு குருவிகூட இந்தப்பக்கம் அண்டாதுங்க!

**பாலன்:** நீ நல்லவிதமா எனக்கு ஒதவி செய்தா இந்த அஞ்சு ரூபாயெப்போலப் பத்து மடங்கு பணம் உனக்கு எனுமாகக் கொடுப்பேன்.

**பூசாரி:** ஆகட்டுமுங்க! அதோ பாருங்க! அந்த "ரூமு" தானுங்க. பத்ரமான எடமுங்க. போய்ப் பார்க்கலாம் வாங்க. (இருவரும் போகிறார்கள்.)

## காட்சி – 35

[இடம் : நர்மதாவின் அறை – இரவு நேரம்
பாத்திரங்கள் : நர்மதா, ராஜன், பாலன்]

**பாலன் :** (தன் கைக்கெடிகாரத்தைப் பார்த்தபடி) மணி 7-30 ஆகிறது. நாளைய ஒத்திகையைப்பற்றித்தான் பேசவந்தேன். பேசியாய்விட்டது. நான் வருகிறேன்.

**நர்மதா :** இருங்கள்! (எழுந்து சென்று இரண்டு டம்ளர்களும் ஒரு டீ கெட்டிலும் கொண்டு வருகிருள். பாலன் எதிரில் ஒரு டம்ளரையும் ராஜன் எதிரில் மற்ருெரு டம்ளரையும் வைத்து, பாலனின் டம்ளரில் கெட்டிலில் இருந்த டீயை ஊற்றுகிருள். அதே சமயம் பாலன் தன் கையிலிருந்த பொட்டணத்திலிருந்து ஒரு உருண்டையை எடுத்து, மேஜையின் அடிப்பக்கம் கைகளை வைத்துக்கொண்டு தனது வலது 2-ம் 3-ம் விரல்களுக்கிடையில் அந்த உருண்டையைச் சொருகிவைக்கிருன்) டீ சாப்பிட்டுவிட்டுப் போங்கள்!

**பாலன் :** (எழுந்துநின்று டம்ளரின் விளிம்பை விரல்களால் பற்றியபடி எடுத்து) வேண்டாம் நர்மதா! இப்பொழுதுதான் டீ சாப்பிட்டுவிட்டு வந்தேன். தேங்ஸ்! (அந்த டம்ளரில் இருந்த டீயில் அவன் விரல்களின் சந்தில் மறைத்துவைக்கப்பட்டிருந்த உருண்டை விழுந்து டீயில் கரைகிறது) அவர் சாப்பிடட்டும். (தன் கையில் இருந்த டம்ளரை ராஜன் முன் வைத்துவிட்டு அவன் எதிரில் இருந்த காலி டம்ளரை எடுத்து நர்மதாவின் எதிரில் வைக்கிருன்) நான் வருகிறேன். வணக்கம் மிஸ்டர் ராஜன்!

**ராஜன் :** வணக்கம்! (பாலன் வெளியே சென்று அறையின் கதவை மூடிவிட்டுப்போகிருன்.)

**நர்மதா :** அவன் ரொம்பக் கெட்டவன். நாம் காதலிப்பதை எப்படியோ தெரிந்துகொண்டான். அவன் மனத்திலுள்ள பொருமையை அவன் முகமாகிய கண்ணுடி தெளிவாகக் காட்டுகிறதே! டீ கூட வேண்டாமென்று சொல்லிவிட்டுப் போகிருன். பொருமை! அவன் கிடக்கிருன்! நீங்கள் சாப்பிடுங்கள்.

## காட்சி - 36.

[இடம்: நர்மதாவின் அறையின் வெளிப்பக்கமும் தெருவும்
**பாத்திரங்கள்:** *பாலனும், பரதேசியும்.*]

பாட்டு (9)

**பரதேசி:** மனிதன் செயலை எடுத்துக்கூற
மனமும் வாயும் நடுங்குது – கெட்ட (மனிதன்)

1. அம்புபட்ட மான்போலே.... ...... ஆ ..........
அம்புபட்ட மான்போலே
அலரித் துடித்திடவே
நம்பினோரை மோசம் செய்தே
நாசம் செய்திடுகின்றானே— (மனிதன்)

2. கன்னியர் மேல் காதலாலே........ஆ........
கன்னியர் மேல் காதலாலே
எண்ணிச் சதிபுரிந்தே
அன்னியனைக் கொன்றிடவே
அஞ்சாமல் துணிகின்றானே— (மனிதன்)

3, தப்பாமல் இறப்பதுண்டு........ஆ........
தப்பாமல் இறப்பதுண்டு
தானும் என்றறியாமே
அப்பாவி மனிதன் அந்தோ
அருந்துகின்றான் துன்பமது

அருந்துகின்றான்! அருந்துகின்றான்! அருந்துகின்றான்!

*(பாட்டின் ஒலி தூரத்தில் அடங்குகிறது. நர்மதா அறையின் கதவின் வெளிப்பக்கம் நின்றிருக்கும் பாலன் திறவு கோல் நுழையும் துவாரத்தின் வழியாக அறையின் உள்பக்கம் என்ன நடக்கிறதென்பதைப் பார்த்துக்கொண்டிருக்கிறான்.)*

## காட்சி – 37

[இடம் : நர்மதா அறையின் உட்பக்கம். தூரத்தில் பரதேசி பாடிய பாட்டின் கடைசி அடியின் ஒலி அடங்கும்போது ராஜன் டீயை அருந்தி முடித்து டம்ளரை மேஜை மீது வைக்கிறான்.]

**ராஜன் :** டீ ஏன் இப்படி இருக்கிறது? ஒரு மாதிரி..

**நர்மதா :** ஏன்! எப்படியிருக்கிறது? (முகம் சுருங்குகிறது)

**ராஜன் :** (எழுந்து நின்று தள்ளாடுகிறான், நெஞ்சைக் கையில் பிடித்துக்கொண்டு) நெஞ்சு!... வலி!... ம்ம்!

**நர்மதா :** ஐயோ! என்ன! என்ன! ஏன் இப்படிப்பார்க்கிறீர்கள்!

**ராஜன் :** அய்யய்யோ! (கீழே விழுகிறான். **நர்மதா :** ("வீல்" என்று கத்துகிறாள். அவனை வாரி எடுத்து உட்காரவைக்க முயற்சிக்கிறாள். அவன் தலை சாய்கிறது. கீழே மெதுவாகப் படுக்கவைத்து விட்டுத்) "தண்ணீர்!" (என்று கூறிவிட்டு எழுந்து சமயல் அறைப்பக்கம் ஓடுகிறாள். பாதி வழியில் திரும்பிக் கதவின்பக்கம் ஓடிக்கொண்டே) "டாக்டரைக் கூப்பிட யாரையாவது...) (என்று கூறிவிட்டுத்)" தண்ணீர்! (என்று சொல்லி மறுபடியும் சமயலறைப் பக்கம் ஓடுகிறாள். மறுபடியும் கதவின் பக்கம் ஓடிச்சென்று கதவைத்திறக்கிறாள் பாலன் உள்ளே வருகிறான்.)

**நர்மதா :** ஐயோ! அவரைப் பாருங்களேன்! (ராஜன் கிடந்த பக்கம் சுட்டிக் காட்டுகிறாள்.)

**பாலன் :** ஏன்? என்ன சங்கதி? எத்தனை மணிக்கு நீ நம் பெணிக்கு வருவாய் என்று கேட்டுவிட்டுப் போகவல்லவா திரும்பி வந்தேன். என்ன நடந்தது?

**நர்மதா :** மயங்கி விழுந்து விட்டார்! என்ன செய்வது! ஊம் (கைகளைப் பிசைகிறாள்) அவரைக் கொஞ்சம் கவனியுங்களேன்.

**பாலன் :** (ராஜனின் அருகில் மண்டியிட்டு ராஜனுடைய கண்களைத்திறந்து பார்க்கிறான். கருவிழிகள் மேலே சொருகியிருக்கின்றன.) சீக்கிரம்! தண்ணீர்!

**நர்மதா :** இதோ! (சமயலறைப்பக்கம் திரும்புகிருள். பாலன் அவள் மீது பாய்ந்து, துணியால் அவளது வாயைப் பொத்திக் கைகளையும் வாயையும் கட்டி விடுகிருன். அவளுடைய கால்களையும் கட்டுகிருன். அவளும் தன்னை விடுவித்துக் கொள்ளத் திமிறித்திமிறிப் பார்க்கிருள். பாலன் அவளை வெளியே தூக்கிச்சென்று, தெருவில் ஒருவரும் இல்லையென்று தெரிந்து, கதவின் சற்று தூரத்தில் தயாராக வைக்கப்பட்டிருந்த ஒரு காரின் பின் ஸீட்டுக்கு அடியில் வைக்கிருன். மறுபடியும் அறைக்குள் போகிருன். சில விநாடிகளில் திரும்பிவந்து காரில் ஏறிக்கொண்டு காரை ஓட்டுகிருன்.

## காட்சி – 38

[இடம் : அஞ்சல் நிலையம் – காரிலிருந்து பாலன் கீழே இறங்கி அஞ்சல் நிலைய டெலிபோனில் பேசுகிருன்.]

**பாலன் :** ஹலோ!... யார்!... சந்திரனு?... ராஜனின் உயிருக்கு ஆபத்து... ஆம்!... நர்மதாவின் அறையில்... சீக்கிரம்!...

## காட்சி – 39

[இடம் : தஞ்சை – புதுக்கோட்டை ரஸ்தா – ஊரின் வெளிப் பக்கம் – பாலன் காரை ஓட்டுகிருன். பின் சீட்டுக்கு அடியில் நர்மதா கட்டுண்ட நிலையில் கிடக்கிருள் – கண்களில் கண்ணீர் வடிந்தபடியிருக்கிறது.

## காட்சி – 40

[இடம் : நர்மதாவின் அறை – காரிலிருந்து இறங்கிய சந்திரன் அறையினுள் பாய்ந்து செல்லுகிருன். தரையில் கிடந்த ராஜனின் அருகில் மண்டியிடுகிருன். ராஜனின் மூக்கிலும் கைவைத்துப் பார்க்கிருன். சட்டையைத்திறந்து மார்பின் இடது பக்கத்தின் மேல் தன் காதை வைத்துக் கேட்கிருன் "மெதுவாகத் துடித்துக்கொண்டிருக்கிறது" என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து வெளிப்படுகின்றன. ராஜனை எடுத்துத் தோள்மீது போட்டுக்கொண்டு வெளியே போய்க் காரில் படுக்கவைக்கிருன். காரை ஓட்டிச்செல்கிருன்.]

## காட்சி – 41

[இடம்: மருத்துவ நிலையம். டாக்டர் துக்காராம் M. A. Ph D., M. B. B. S. என்ற விளம்பரப் பலகையுடைய கட்டிடத்தின் முன் கார் நிற்கிறது. ராஜனைத் தூக்கிக்கொண்டு சந்திரன் மருத்துவ நிலையத்துக்குள் நுழைகிறான்.]

## காட்சி – 42

[இடம்: மருத்துவ நிலையத்தின் உட்பக்கம். டாக்டர் ராஜனைப் பரிசோதிக்கிறார். அவன் வாயில் ஒரு கண்ணாடிக் குழாய் போன்ற கருவியை வைத்து எடுத்துக்கொண்டு அதைத் தமது பரிசோதனைச் சாலையில் பரிசோதிக்கிறார். "விஷம்" என்ற சொல் அவர் வாயிலிருந்து வெளிப்படுகிறது.

## காட்சி – 43

[இடம்: மருத்துவநிலையத்தின் உட்புறம். டாக்டரும் நர்சுமாக ராஜனுக்கு ஊசிகள் போடுகிறார்கள். ராஜன் படுக்கையில் கிடத்தப்படுகிறான். பிராணவாயு சிகிச்சை தரப்படுகிறது.

**டாக்டர்:** மிஸ்டர் சந்திரன்! அரைமணி நேரம் கழித்து நீங்கள் வந்திருந்தால் ஒன்றும் செய்திருக்க முடியாது. "விஷம்" அருந்தியதால் இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது.

**சந்திரன்:** விஷமா?

**டாக்டர்:** ஆம்! விஷம்தான்! அவருடைய எச்சிலைப் பரிசோதித்ததில் விஷம் கண்டு பிடிக்கப்பட்டது. உடனே மாற்று மருந்து கொடுக்கப்பட்டதனால் சில மணி நேரத்தில் பூரண சுகம் கிடைக்கும்.

**சந்திரன்:** டாக்டர்! உங்களுக்கு எந்தவிதத்தில் நன்றி செலுத்துவது என்பதே தெரியவில்லை. என் நண்பனை நாளைக் காலையில் அழைத்துப் போகலாமா?

**டாக்டர்:** காலை எட்டு மணிக்குமேல் அழைத்துச் செல்லலாம்.

**சந்திரன்:** (நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து டாக்டரின் மேஜை மீது வைக்கிறான்) இது முன்பணமாக இருக்கட்டும் டாக்டர்! நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். வணக்கம்!

**டாக்டர்:** வணக்கம்! போய் வாருங்கள்.

## காட்சி – 44

[இடம்: நர்மதாவின் அறை: சந்திரன் மேஜையின் ட்ராயரைத் திறந்து பார்க்கிறான். அறையைச் சுற்றி வருகிறான். ஒரு மூலையில் கிடந்த கடிதத்தை எடுக்கிறான்.]

**சந்திரன்:** ஒரு பக்கம் நெருப்பில் வெந்திருக்கிறதே! (படிக்கிறான்)

---

நர்மதா! இதோ பையில் ரூபாய் 5000
வருகிறேன். விதைப் பொடியை யில்
பணத்துடன் வா. இதை நெருப்பில்
உன் க

---

உன்... க!... உன் கணவன்!... உன் காதலன்!... உன் 'க' கணவனே! காதலனே!... என்ன அக்கிரமம்!

(கீழே கிடந்த தோல்பையை எடுத்துப்பார்க்கிறான். பை காலியாக இருக்கிறது.)

களவு! கொலை!...... அவன்யார்?...... அவனோடு ஓடிப் போயிருப்பாள்! ராஜா! உன் கதி இப்படியா ஆக வேண்டும்?...... ஹும்... சேலைகட்டியமாதரை நம்பினால்!... என்று சும்மாவா சொன்னான்!

---

## காட்சி – 45

[இடம்: காளி கோவில்: காரிலிருந்து நர்மதாவைத் தூக்கிக் கொண்டு பாலன் முன்னே செல்லப் பூசாரி பின்னே செல் கிறான். அறை திறக்கப்படுகிறது. நர்மதா ஒரு பாயின் மேல் கிடத்தப்படுகிறாள். பாலன் கட்டுகளை அவிழ்த்துவிடு கிறான்.]

**பாலன்:** பூசாரி! நீ போய்க் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா

**பூசாரி:** சரீங்க! (போகிறான்)

(கட்டுகள் அவிழ்க்கப்பட்டபின் நர்மதா எழுந்து உட்காரு கிறாள். இரண்டு கைகளையும் முழங்கால்களுக்குக் கீழ் கோர்த்தபடி, சுவற்றின் பக்கமாகத் தன்முகம் இருக்கும்படி, தலையை முழங்கால் மீது சாய்த்து வைத்துக்கொண்டு விம்மு கிறாள்,)

**பாலன்:** நர்மதா தேவியவர்களே! செய்வதெல்லாம் செய்து விட்டு அழுதுகொண்டிருப்பதனால் பலன் என்ன? நீ செய்த குற்றத்திற்கு உனக்குக் கிடைக்க வேண்டிய தண்டனை தூக்கு மேடையில் தொங்குவதுதான். ராஜன் இறந்து விட்டான்!

**நர்மதா:** திடுக்கிட்டுத் தலையைத் தூக்கிப்பார்த்து) ஆ!...... இறந்துவிட்டாரா! (முகத்தை இருகைகளாலும் மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுகிறாள்.)

**பாலன்:** ஆம்! இறந்துவிட்டான். நீ கொடுத்த விஷத்தால்!

**நர்மதா:** (மெதுவாக அவன் பக்கம் திரும்புகிறாள்! கண்கள் அகல விரிகின்றன. பார்வையில் கோபம். மூச்சில் வேகம்) என்ன!...... என்ன!......

**பாலன்:** நீ டீயில் கலந்து கொடுத்த விஷத்தால் ராஜன் இறந் தான் என்று சொன்னேன்.

**நர்மதா:** (கோபத்தால் கண்கள் சிவக்க நெஞ்சம் பதைபதைக்க எழுந்திருக்கிறாள். ச்ச் — வாயை மூடு!... பேயே! (சில நொடிப்பொழுது அவனை முறைத்துப்பார்க்கிறாள்.)

**பாலன்:** (அசட்டுச் சிரிப்புச்சிரித்துவிட்டு) என் வாயை மூடிக் கொண்டுதான் இருக்கிறேன் பெண்ணே!... உன்னைக் காப்பாற்றுவதற்காக!...... நான், என் வாய்திறந்தால், நீ இருக்கவேண்டிய இடம் இதுவல்ல!... தூக்குமேடை! நீ கொலைகாரி!

**நர்மதா:** பொய்! பொய்! நான் ஒன்றுமறியேன்!

**பாலன்:** அப்படியானால் அவனுக்கு விஷம் கொடுத்தது...

**நர்மதா:** யார்!......யார்!

**பாலன்:** நீதான்! உன் மனம் குழம்பியிருக்கிறது. இப்பொழுது உன்னை இங்கே விட்டுச்செல்கிறேன். உன்னைத் தூக்கு மேடையிலிருந்து காப்பாற்றக்கூடியவன் நான் ஒருவன்தான் என்பதை மனதில் பதியவைத்துக்கொள். நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்... ஆனால்...ஒரு நிபந்தனையின் பேரில்... நீ என்னைக் காதலிக்கவேண்டும்! என் மனைவியாக வேண்டும்!

**நர்மதா:** ச்சீ! கயவனே! உன்னையா நான் காதலிக்க வேண்டும்! பலவந்தமாக என்னைத் தூக்கிக்கொண்டு வந்து இங்கே சிறைவைக்கும் கொடியவனே! உன்னையா காதலிக்க வேண்டும். —என் காலின் தூசிகூட உன்னை விரும்பாது!

**பாலன் :** நீ என்னைத் தவருகப் புரிந்துகொண்டாய்! நீ அங்கிருந்தால் இன்னேரம் போலீசாரின் கையில் அகப்பட்டிருப்பாய்! உன்னைக் காப்பாற்றவே இங்கு கொண்டுவந்தேன்.

**நர்மதா :** வாயில் துணி வைத்து அடைத்து, கைகளுக்கும் கால்களுக்கும் கட்டுப்போட்டு !......

**பாலன் :** நீயாக என்னுடன் புறப்பட்டு வந்திருப்பாயா? ஒருக்காலும் வந்திருக்கமாட்டாய். அதனுல்தான் அப்படிச்செய்ய வேண்டியதாயிற்று. இரண்டில் ஒன்றைத் தெரிந்துகொள்! (பூசாரி வருகிருன்) பூசாரி! இதோ, இந்த 5-ரூபாயை வைத்துக்கொள். அம்மாவுக்கு ஏதாவது ஆகாரம் வேண்டுமானுல் வாங்கிக்கொடு! நல்லவேளையாக இந்த ரூமோடு சேர்ந்தாற்போல "பாத்ரூம்" இருக்கிறது. நான் இந்த ரூமின் கதவை வெளிப்பக்கம் தாளிட்டுவிட்டுப் போய்விடுவேன். நான் போய்வருகிறேன் நர்மதா! நாளைக்காலையில் உன்னைவந்து பார்க்கிறேன். உனக்கு ஒரு வேலைக்காரியும் அழைத்துவருகிறேன். (வெளியே சென்று கதவைப் பூட்டுகிருன்.) பூசாரி! ஜாக்கிரதையாக இருக்கவேணும். இந்தத் திறவுகோலை நான் கொண்டுபோகிறேன். இதுக்கு "டுப்ளிக்கேட்" அதாவது இந்தப்பூட்டுக்கு இதேமாதிரி இன்னொரு திறவுகோல் உங்கிட்ட இருக்குதா?

**பூசாரி :** இல்லீங்களே! ஒரு பூட்டுக்கு ஒரே சாவிதானுங்க! ரெண்டு எதுக்குங்க?

**பாலன் :** சரி, சரி! பத்ரமாப் பார்த்துக்கோ! நான் வர்ரேன் (போகிருன்)

## காட்சி – 46

[இடம் : ராஜனின் அறை. ராஜனும் சந்திரனும் உட்கார்ந்திருக்கிருர்கள்.

**ராஜன் :** அந்தக் கடிதம் எழுதினவன் யாராயிருக்கலாம்?

**சந்திரன் :** ஒருவேளை பாலன்...........(பாலன் வருகிருன்)

**பாலன் :** வணக்கம்!

**ராஜன் :** வணக்கம்! வாருங்கள்!.........உட்காருங்கள்!

**பாலன் :** (ஒரு நாற்காலியில் உட்கார்ந்து) நர்மதாவைப் பார்க்கலாமென்று போயிருந்தேன். ஒத்திகை நேரத்திற்கு வந்து சேராததால் நானே நேரில் வந்து அழைத்துப் போகலாமென்று வந்தேன். நர்மதா தன் ரூமில் இல்லை! ஒரு வேளை இங்கே வந்திருக்கலாம் என்று............(ராஜனும் சந்திரனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள்)

**சந்திரன் :** அவள் இங்கே வரவில்லையே!

**பாலன் :** வேறு எங்கே போயிருப்பாள்! ஊம்! (யோசனை செய்கிறான்) சரி நான் வருகிறேன்! ஏன் ஒருமாதிரியாக் இருக்கிறீர்கள்—இரண்டுபேர் முகத்திலும் களையில்லையே! (எழுந்திருக்கிறான்)

**சந்திரன் :** உட்காருங்கள் மிஸ்டர் பாலன்! உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டியிருக்கிறது; ஒரு பத்து நிமிஷம்.........

**பாலன் :** பத்து நிமிஷமென்ன? எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசலாம் (உட்காருகிறான்) அவசரமான வேலை ஒன்றுமில்லை.

**சந்திரன் :** நர்மதாதேவியைப் பற்றித்தான் பேசவிரும்பினேன். அவளுடைய வரலாறு பற்றித் தெரியவேண்டும். உங்களுக்கு அவளைப்பற்றித் தெரிந்ததைக் கூறுவீர்களா?

**பாலன் :** அவள் தன் வரலாறு பற்றி உங்களிடம் ஒன்றும் சொல்லவில்லையா? (ராஜனைச் சுட்டிக்கேட்கிறான்)

**ராஜன் :** நான் அதைப்பற்றிக் கேட்டறியச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

**பாலன் :** (சந்திரனைப் பார்த்து) அவளைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியவேண்டும்?

**சந்திரன் :** அவளுடைய பெற்றோர் யார்?

**பாலன் :** அவளுடைய பெற்றோர் இறந்துவிட்டதாகக் கேள்வி. அவள் அனாதை என்று நினைக்கிறேன்.

**சந்திரன் :** அவள் மணமானவளா?

**பாலன் :** மணமானவளாயும் இருக்கலாம் — மணமாகாதவளாயுமிருக்கலாம்.

**சந்திரன் :** எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?

**பாலன் :** இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை ஒரு வாலிபன் அவளிடம் வருகிறான். இருவரும் ஒரே இடத்தில் இரண்டொரு நாள் வாழ்கிறார்கள். பிறகு அவன் காணப்படுவதில்லை. அவன் அவளுடைய கணவனாக இருக்கலாம். அல்லது காதலனாகவும் இருக்கலாம்!

**சந்திரன் :** கணவன் அல்லது காதலன்! (சற்று உரத்த குரலில்)

**பாலன் :** கணவனோ அல்லது காதலனோ, யாராயிருந்தால் என்ன? எங்களுக்கு வேண்டியதெல்லாம் அவளுடைய நடனங்கள்தானே!

**சந்திரன் :** ஒரு வாலிபன் என்றீர்களே! அவனைப் பற்றி ஏதாவது கூறமுடியுமா? அவனுடைய தோற்றம், வயது, முதலியவை பற்றி.........

**பாலன் :** பார்வைக்கு அழகானவன்! மிஸ்டர் ராஜனைப்போல் இருப்பான். வயது சுமார் 22 இருக்கும். இந்த விபரமெல்லாம் எதற்காகக் கேட்கிறீர்கள். (ராஜனும், சந்திரனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொள்கிறார்கள்)

**ராஜன் :** மிஸ்டர் பாலன்! விஷயம் அதிக முக்கியமானது. உங்களுடைய யோசனையும் எங்களுக்குத் தேவையாக இருக்கிறது. நீங்கள் நடனக்குழுவின் தலைவராக இருப்பதால் இவ்விஷயத்தை உங்களிடம் தெரிவிக்கவேண்டியது எங்களுடைய கடமை.

**பாலன் :** விஷயம் என்ன?

**ராஜன் :** நேற்று நான் அவளுடன் இருக்கும்போது நீங்களும் கூடஇருந்தீர்கள்?

**பாலன் :** ஆமாம்!

**ராஜன் :** நீங்கள் சென்றபிறகு எனக்கு அவள் "டீ" கொடுத்தாள்.

**பாலன் :** சரி!

**ராஜன் :** அந்த டீயில் விஷம் கலந்திருந்தது!

**பாலன் :** (திடீரென்று எழுந்து நின்றான். இருவரையும் மாறி மாறிப் பார்க்கிறான். அவனுடைய பார்வையில் ஆச்சரியமும் சந்தேகமும் மாறி மாறித் தோன்றுகிறது)...விஷம்!... விஷம்!... என்ன சொல்லுகிறீர்கள்!

**ராஜன் :** அந்த டீயைக் குடித்தேன். நெஞ்சில் வலி மிகுந்தது. தலை சுற்றிற்று. மூளையில் சம்மட்டி கொண்டு தாக்குவது போலிருந்தது. கண்கள் இருண்டன...பிறகு...நான் கண் விழித்தபோது மருத்துவ நிலையத்தில் இருப்பதை உணர்ந்தேன்.

**பாலன் :** என்ன பயங்கரமான செய்தி! கொலை செய்ய முயற்சி!

**சந்திரன் :** நான்தான் ராஜனை டாக்டரிடம் எடுத்துச்சென்றேன்.

**பாலன் :** நீங்களா! அந்தச்சமயத்தில் நீங்கள் எப்படி அங்கே போய்ச் சேர்ந்தீர்கள்?

**சந்திரன் :** போனில் செய்தி வந்தது?

**பாலன் :** போனில் செய்தி! ருசிகரமாக இருக்கிறதே! போனில் பேசியது யார்?

**சந்திரன் :** "யார் பேசுவது?" "யார் பேசுவது" என்று இரண்டுமுறை கேட்டேன். பதிலே இல்லை.

**பாலன் :** எல்லாம் மர்மமாக இருக்கிறது! (சற்று யோசிக்கிறான்) ஒருவேளை, போனில் பேசியது அந்த வாலிபனாகத்தான் இருக்கும்.

**சந்திரன் :** இருக்கலாம்.

**பாலன் :** ஆனால் விஷம் வைத்துக் கொல்ல முயன்றதற்குக் காரணம்?

**ராஜன் :** பண ஆசை!

**பாலன் :** பண ஆசையா?

**சந்திரன் :** ஆம்! ராஜன் அவனுடைய அறைக்குச் சென்ற போது, பாங்கியிலிருந்து எடுத்த பணம் ரு. 5000/- அவனுடைய கைப்பையில் இருந்தது. நான் அங்கே போனபொழுது பை வெறும் பையாகக் கிடந்தது.

**பாலன் :** பயங்கரமான செய்தி.

**ராஜன் :** பயங்கரமான சதியுங்கூட.

**பாலன் :** அப்படியானால் பணத்திற்காக நர்மதா உங்களைக் கொல்ல முயன்றாள் என்று நம்புகிறீர்களா?

**சந்திரன் :** அப்படி நம்புவதற்குத் தகுந்த ஆதாரமும் இருக்கிறது.

**பாலன் :** என்ன ஆதாரம் ?

**சந்திரன் :** அந்த அறையின் ஒரு மூலேயில் நெருப்பிஞல் ஒரு பக்கம் கருகிப்போன கடிதம் ஒன்று கிடந்தது. ராஜனுக்கு விஷம் கொடுத்துவிட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டு வரும்படி நர்மதாவுக்கு அதில் எழுதப்பட்டிருந்தது.

**பாலன் :** என்ன ஆச்சரியம்! பார்வைக்கு எவ்வளவு நல்லவளாக......

**ராஜன் :** கொடிய விஷப்பாம்புக்கும் நல்லபாம்பு என்றுதானே பெயர் !

**பாலன் :** அப்படியானல் இப்பொழுது அவள் எங்கே?

**சந்திரன் :** அதே கேள்வியைத்தான் நாங்களும் உங்களேக் கேட்கிறேம்.

**பாலன் :** நண்பர்களே ! என்னுல்ஆன உதவியை உங்களுக்குச் செய்யத் தயங்கமாட்டேன். இப்படிப்பட்ட கொலேகாரர்களேக் கண்டுபிடித்துத் தண்டனே பெறச்செய்யவேண்டியது நமது கடமை. எங்களுடைய குழு முக்கியமான ஒரு நடனமாதை இழந்துவிட்டதாக வைத்துக் கொள்ளவேண்டியது தான். எனக்கு விடை கொடுங்கள். மறுபடியும் சந்திப்போம். வணக்கம்.

**ராஜனும், சந்திரனும் :** வணக்கம். (எழுந்திருக்கிருர்கள். பாலன் போகிருன்.)

## காட்சி – 47.

[இடம் : காளி கோவில். பூசாரியின் அறை.

**பாத்திரங்கள் :** பொன்னியும், பூசாரியும்]

**பொன்னி :** இந்தா ! மறுவாதியா நாளேக்கே நம்ம கண்ணுலத் தெப்பத்தி ஒரு முடிவு செய்யிலே—உன்னே லேசிலெ விடமாட்டேன்—தெரிஞ்சுக்கோ.

**பூசாரி :** (பாட்டு)

**கலியாணம் பண்ணிக்கிறேன் பொன்னம்மா – நீதான்**
**கடுகடுப்பாப் பேசவேண்டாம் பொன்னம்மா (பிம்பிம்பிம்...)**

**பொன்னி :** ஏ மச்சான்! அந்த பிம்பிம்பி வேலயெல்லாம் இந்தப் பொன்னம்மாகிட்டெ நடக்காது. ஆ...மா!

**பூசாரி :** அட, நீ யொண்ணு! உன்னை எதுக்கு நானேமாத் தறேன்?

**பொன்னி :** ஏமாந்த முடியாதுண்ணுதான் சொல்றேன். எங்கப் பனும் எங்கம்மாளும் இளிச்சவாயங்கொண்ணு சொல்லி, "பத்து நாளைக்கு இவளெ இங்கெயே விட்டுட்டுப் போங்க—காளி சந்நிதானத்திலே இருக்குட்டும்—அப்பறம் எந்தப் பேயும் இவகிட்டெ வராது"ண்ணு சொல்லி அவுங்களெ ஏமாத்தினே!

**பூசாரி :** இப்பக்கூடத்தான் சொல்லுவேன். உங்கிட்டெ வர்ரதுக்குப் பேய் கிய் எல்லாம் பயந்து நடுங்குமுண்ணு.

**பொன்னி :** வேறெ பேய் பிடிக்கிறதுக்குப் பதிலா நீயேதான் புடிச்சிகிட்டயே! உன்னைவிடப் பெரிய பேய் எங்கிருக்குது? வந்து எட்டு நாளாச்சு. கண்ணாலத்தெப்பத்திப் பேச்செடுத்தா, தட்டிக்கழிக்கிறயே! என்ன சங்கதீன்னு கேக்கறேன். நாளைக்கு ரெண்டிலே ஒண்ணு தெரிஞ்சிடணும். நீ சரியான ஆளுண்ணு எனக்குந் தெரியுது!

**பூசாரி :** அதென்ன அப்பிடிச் சொல்லிப்பிட்டயே!

**பொன்னி :** சும்மா நிறுத்து! தெரியும்! பொம்பளைங்களெக் கெடுக்ற வேலையிலே இன்னொருத்தனுக்கும் ஒதவி செய்ய ஆரம்பிச்சட்டையோ. அந்தப் பொண்ணு யாரு?

**பூசாரி :** எந்தப் பொண்ணை?

**பொன்னி :** அதா—உங்க பாட்டி பொண்ணு! ஆளெப்பாரு... ஆளெ!

**பூசாரி :** அட நீயொண்ணு! (பல்லை இளிக்கிறான்)

**பொன்னி :** நான் ஒண்ணுதான்! பல்லெ இளிக்கிறதெப்பாரு! அந்த ரூமிலே வச்சுப் பூட்டீருக்குதே—அந்தப் பொண்ணு யாருண்ணு கேக்கறேன்.

**பூசாரி :** அதுவா? (பொன்னியின் காதில் ரகசியமாகச் சொல்லுகிறான். பிறகு) ரூபா அம்பது பொன்னி! ரூபா அம்பது! அதெவச்சு நம்ப கண்ணாலத்தெ முடிச்சிக்குவோம், என்ன?

**பொன்னி :** சேச்சே! இப்படி அநியாய வழியிலே சம்பாதிக்கிற பணத்தெ வச்சுக் கலியாணங்கட்டிகிட்டா உருப்பட்ட மாதிரிதான் போ!

**பூசாரி :** அட நீயொண்ணு! சும்மா கெட! பெரிய நாயத்தையும் அநியாயத்தையும் கரைச்சுக் குடிச்சவமாதிரி பேச வந்துட்டா, ஒலகத்திலே மனுஷென் எத்தனையெத்தனே வழியிலே, என்னென்ன பெறட்டுப் பித்தலாட்டமல்லாம் பண்ணி, எத்தனே ஏழை எளியவங்க வயித்திலே அடிச்சுப் புடுங்கருன்! எப்படியெல்லாமோ ஏமாத்திப் பொருளைச் சேர்க்கிருன். இன்னிக்கு நாட்டிலே யோக்கியன் எத்தனே பேருன்னு விரலைவிட்டு எண்ணு பார்க்கலாம்! ஒலகம் போற போக்கிலே—இவ ஒருத்தி!

**பொன்னி :** மச்சான்! அதென்னமோ......எனக்கொண்ணும் புடிக்கிலே. அம்புட்டுத்தான்.

## காட்சி – 48.

[இடம் : காளிகோயில். பூசாரி தூங்கிக்கொண்டிருக்கிருன். பொன்னி எழுந்து மெதுவாக நடந்து, அறையைவிட்டு வெளியே வந்து, கதவை வெளிப்பக்கம் நாதாங்கியை மாட்டிவிட்டு, நர்மதாவை அடைத்திருந்த அறைக்குப் போகிருள். நிலவு வெளிச்சம். சன்னல் பக்கம் வெளியே நின்று கூப்பிடுகிருள்]

**பொன்னி :** அம்மா! அம்மா! (மெல்லிய குரலில்)

**நர்மதா :** (திடுக்கிட்டு) யா......யா...ரது? (சன்னலின் அருகே வரும்படி பொன்னி ஜாடைகாட்டுகிருள். நர்மதா ஜன்னலின் அருகே போகிருள்.)

**பொன்னி :** (மெதுவான குரலில்) உன்னெப்பத்தி எனக்குத் தெரியும்மா—ஒம்மனசுக்கு விரோதமா உன்னே இங்கே அடச்சு வச்சிருக்குறுவ. இல்லே? (நர்மதா பேசாமல் விழிக்கிருள்) பயப்படாதேம்மா! நான் ஒனக்கு உதவி செய்யத்தான் வந்திருக்றேன்.

**நர்மதா :** அம்மா! நீ யாரோ! தெரியலையே!

பான்னி : இந்தக் கோயில் பூசாரி இருக்கும்பாரு, அவனத் தான் நான் வச்சிக்கிட்டிருக்கேன்—எம்மனசிலே! கண்ணாலஞ் செய்துக்லாம்னு அவென் எங்க மச்சாந்தான்! ஏம்மா! உனக்கு ஒதவி செய்யறேன். நீ ஓடிப்போறயா?

ர்மதா : அப்படியா! நீ சொல்றதெ நான் நம்ப முடியிலேயே! (கண்ணீரைத் துடைக்கிருள்)

பான்னி : அழாதேம்மா! பாவம்! நடுராத்திரிலே தனியாப் போறதுக்கு ஒனக்குத் தயிரியம் இருக்குதாண்ணு தெரியணும். நல்லநெலா வெளிச்சமிருக்குது. போயிட்ரயாம்மா?— சொல்லம்மா?

ர்மதா : அம்மா! இந்த இடத்தெவிட்டு என்னைத் தப்பிச்சு விட்டாப் போதும். உனக்குக் கோடி புண்ணியம் உண்டு.

பான்னி : அப்படீன்னுச் செரி! பொறப்பட்றதுக்கு தயாராயிரு! இதோ வந்துட்டேன்.

## காட்சி — 49.

டம் : காளி கோயில். ஒருபக்கம் மதிலில் சாத்தப்பட்டிருந்த ஏணியைப் பொன்னி எடுத்து வருகிருள். நர்மதாவை அடைத்திருந்த அறையின் கூரையின் மேல் ஏணியின் உதவியால் ஏறுகிருள். ஓடுகளைப் பிரிக்கிருள். ஆள் நுழையும்படியான இடைவெளியை உண்டுபண்ணுவதற்காக இரண்டு மூங்கில் தப்பைகளைப் பெயர்த்து ஒடிக்கிருள். ஏணியை மேலே தூக்கி அந்த இடைவெளி வழியாக அந்த அறைக்குள் இறக்குகிருள். "மெதுவாக ஏறி மேலே வாம்மா!" என்கிருள். சில நொடிகளில் நர்மதா கூரை மேல் வந்து சேருகிருள். ஏணியை மேலே இழுத்தபின் ஒடித்த தப்பையையும், எடுத்த ஓடுகளையும் முன்போலவே பொருத்திவைக்கிருள்—பொன்னி. அந்த ஏணியின் உதவியால் இருவரும் கீழே இறங்குகிருர்கள்—முதலில் பொன்னியும் பிறகு நர்மதாவுமாக. பொன்னி ஏணியை எடுத்துக்கொண்டு முன்செல்ல நர்மதா பின் செல்லுகிருள். ஏணியை அது முன்பு இருந்த இடத்திலேயே வைத்துவிட்டு நர்மதாவைக் கூட்டிக்கொண்டு பொன்னி கோயிலின் முன்புறத்தை நோக்கிப் புறப்படும்போது—கதவு தட்டும் சத்தமும் "பொன்னி!— பொன்னி!" என்று கூப்பிடும் குரலும் அவர்களுக்குக் கேட்கிறது. நர்மதா பொன்னியின் தோளைப்பிடிக்கிருள். அவள் கை நடுங்குகிறது.]

**பொன்னி:** *நீ பயப்படவேண்டாமம்மா! பூசாரி, முழிச்சுக்கிட்டாம்போல இருக்குது. நான் வர்ரப்பொ அவன் தூங்கிக்கிட்டு இருந்தான். கதவைச்சாத்தி வெளிப்பக்கம் நாதாங்கி போட்டு வந்திருக்கிறேன். அவனெ நான் கவனிச்சுக்கிறேன். நீ போய்ட்டு வாம்மா! காளியாத்தா ஒனக்குத் துணையிருப்பா—ஒண்ணுக்கும் பயப்படாதே!*

**நர்மதா:** *(கீழே குனிந்து பொன்னியின் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டு) அக்கா! நீதான் எனக்குத் தெய்வம்! நான் உயிருள்ளவரைக்கும் உன்னைமறக்கமாட்டேன்! போகட்டுமா?*

**பொன்னி:** *போய்ட்டுவாம்மா. (நர்மதா போகிறாள்).*

## காட்சி – 50

*[இடம்: காளிகோயிலிலிருந்து தஞ்சாவூருக்குச் செல்லும் பாதை. நர்மதா போய்க்கொண்டிருக்கிறாள். ஒரு பாம்பு வழியில் சென்றது. அதைக் கடந்துசென்றபின் நரிகள் ஊளையிட, எதிரில் வருகின்றவர்கள் கண்ணில் படாதிருப்பதற்காக, இரண்டு இடங்களில் ரஸ்தாவின் பக்கத்தில் புதர்களின் மத்தியில் ஒளிந்திருந்துவிட்டு அதிகாலையில் தஞ்சையை அடைகிறாள்.]*

## காட்சி – 51

*[இடம்: ராஜனின் வீடு. அதன்மதிற்சுவர் ஓரமாக நர்மதா போய்க்கொண்டிருக்கிறாள். வீட்டின் உட்பக்கமிருந்து பாலன் வெளியே வருவதைப் பார்த்துவிடுகிறாள். செடிகள் மறைவில் ஒளிந்துகொள்ளுகிறாள்.]*

**நர்மதா:** *''சந்திரனைப்பார்க்க நான் வந்தேன்! இவன்?''... பாலன் தன்னைக்கடந்து சென்று கண்ணுக்கு மறையும்வரை காத்திருக்கிறாள். பிறகு ராஜனின் வீட்டுக்குள் போகிறாள். ராஜன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிடுகிறாள்.]*

**நர்மதா:** (ஆச்சரியத்துடன்) நீங்கள்............உயிரோடு...... (நர்மதாவின் முகத்தில் மகிழ்ச்சி ததும்புகிறது)

**ராஜன்:** இருப்பதைப் பார்த்து ஆச்சரியமாயிருக்கிறதா? (முகத்தில் கோபக்கனல் வீசுகிறது) பேயே!

**நர்மதா:** இல்லை! (முகம் சுருங்குகிறது) பேயல்ல! பெண்தான்!

**ராஜன்:** (கோபத்தோடு எழுந்து) பெண்! நீயா பெண்

**நர்மதா:** (முகத்தில் பயமும் ஆச்சரியமும் தோன்ற) என்ன! என்ன! சொல்லுகிறீர்கள்!

**ராஜன்:** (ஒவ்வொரு அடியாக முன் எடுத்துவைத்து) பாவி! பாதகி! நீலி!

**நர்மதா:** (ஒவ்வொரு அடியாகப் பின் எடுத்து) இல்லை! இல்லை! இல்லை!

**ராஜன்:** சதிகாரி!

**நர்மதா:** அல்ல!

**ராஜன்:** சண்டாளி!

**நர்மதா:** அல்ல!

**ராஜன்:** பெண் உருவத்தில் வந்த பேயே!

**நர்மதா:** ஊஹூம்!

**ராஜன்:** பசுத்தோல் போர்த்த புலியே!

**நர்மதா:** அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்!

**ராஜன்:** சீ! நாயே! பணவெறி பிடித்த பேயே! கள்ளமனம் படைத்த குள்ளநரியே! கொலைகாரி!

**நர்மதா:** இல்லை! நான் கொலைகாரியல்ல! உங்களுக்கு நான் "விஷம்" கொடுக்கவில்லை!

**ராஜன்:** (கோபச்சிரிப்புச் சிரிக்கிருன்) (இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு-சில நொடிப்பொழுது அவளைக் கோபமாக முறைத்துப் பார்க்கிருன். அவள் நடுங்குகிருள்.)

விஷம்! அந்த வார்த்தை எப்படி வந்தது? (அவளை ஆள்காட்டி விரலால் சுட்டிக்காட்டிக்கொண்டே) விஷம்!... அந்தச் சொல் எப்படி வந்தது? – நான் சொல்லவில்லையே! நீயாகச் சொன்ன சொல் – உன் சொல்லே உன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது! நீதான் "விஷம்" வைத்தாய்! அஜாக்கிரதையால் உளறிவிட்டாய்!

**நர்மதா :** இல்லை ! நான் ஒரு பாவமும் அறியேன் !

[சந்திரன் பக்கத்து அறையில் நின்றபடி இவர்கள் பேசுவதைக் கவனித்துக்கொண்டிருக்கிறான்]

**ராஜன் :** சாகசக்காரி ! மாய்மாலக் கள்ளி ! சோப்பும் பவுடரும், சொகுசான உடையும் போட்டு மினுமினுக்கும் உன் மேனி ! கொள்ளையும் கொலையும் புரியக் கொக்கரிக்கும் உன் உள்ளம் ! அன்பே ! ஆருயிரே ! என்று அஞ்சுகமொழி பேசும் உன்வாய் ! வஞ்சகம் செய்து நஞ்சினை ஊட்டும் உன் கை ! நல்லவர் மனதைக் கொள்ளை கொள்ளும் உன் கடைக்கண் பார்வை ! கொண்டவனையே அன்றிக் கண்டவனுடனெல்லாம் காதல் புரியும் உன் கண்கள்-ஒரு பாவமும் அறியேன் என்று சொல்லுகிறாய்? உன் உடலின் ஒவ்வொரு அங்கமும் உன் உள்ளத்தின் ஒவ்வொரு எண்ணமும் பாவத் தொழிலே புரிந்து பழக்கப்பட்டவைகளாச்சே ! அப்படியிருக்க, ஒரு பாவமும் அறியேன் என்று கூறும் நீ, நீலிகளுக்கெல்லாம் தலைமை பெற்ற பதுநீலி ! பகட்டான உருவம் கொண்ட பாம்பே ! மின்னலென்னும் போர்வை கொண்ட பேரிடியே ! மாயவடிவங்கொண்ட மனிதப் பேயே ! போ ! போ ! போய்விடு.

**நர்மதா :** ஐயோ ! இதென்ன ! என்னென்னமோ சொல்லுகிறீர்களே ! (சந்திரன் அறைக்குள் வந்து பேசாமல் நிற்கிறான்.)

**ராஜன் :** பத்தினிவேடம் போதும் பாவியே !' (சந்திரனை சுட்டிக்காட்டி) இந்த, உத்தமன் இல்லாதிருந்தால் செத்து மடிந்திருப்பேனடி ! செத்துமடிந்திருப்பேன் ! என்னை அன்னையின் அடிவயிற்றில் பெருநெருப்பு மூட்டத் துணிந்தவளே ! உன் கள்ளக்காதலன் எழுதிய கடிதத்திற்கு நீ மூட்டிய நெருப்பு அணைந்துவிட்டதடீ ! (இரண்டடி தாவிச் சென்று மேஜையின்மேல் கிடந்த கடிதத்தை எடுத்துவந்து நீட்டுகிறான்)...இதோ !

**நர்மதா :** (நடுங்கிக்கொண்டே, கைநீட்டி அதை வாங்கிப் படிக்கிறாள்-கடிதம் கீழே நழுவிவிழுகிறது.) நான் ஒரு பாவமும் அறியேன்-நான் சொல்வதைக் கேளுங்கள்.

ராஜன் : நீ சொல்வதை நான் கேட்பதா? கூடாது! கூடாது! அன்பைத் தந்தவன் நான்! அழிவைத்தந்தவள் நீ! ஒளி, நான். இருள் நீ. என் முன் நிற்கவேண்டாம்! திட்டிவிடம் போன்ற உன் பார்வைபட்டால் என் நிலை என்னாகும்? என் மனம் கல்லாகும்! இரும்பாகும்! என் கரங்கள் உன்னைக்கொன்றுவிடத் துடிதுடிக்கும். போ! போ! போ! (ஒவ்வொரு அடியாக அவன் முன்னேற, ஒவ்வொரு அடியாக அவள் பின்வாங்கினாள். கடைசி அடியில் கதவைத் தாண்டிவிட்டாள். கதவு சாத்தப்பட்டது-அவனால். கதவின்மேல் முதுகைச் சாய்த்தவண்ணம் அவன் வேகமாக மூச்சுவிட்டுக்கொண்டு நிற்கிறான்.)

---

## காட்சி – 52

[இடம்: ராஜனின் வீட்டுவாசல். பின்னேக்கியபடி வாசற்படியில் கால்வைத்த நர்மதா தடார் என்று கீழே விழுகிறாள். இரண்டொரு விநாடிகள் மயங்கிக் கிடக்கிறாள். பிறகு எழுந்திருக்கிறாள். தலையில் அடிபட்டதால் ஆன காயத்திலிருந்து வடிந்த இரத்தம் கன்னத்தில் வழிகிறது-கன்னத்தில் வழியும் இரத்தத்தைக் கையில் தடவிப் பார்த்து இரத்தமென்று அறிகிறாள். அங்கிருந்த ஒரு கற்பலகையின்மீது அமர்ந்து தனது முன்தானையில் துணியைக் கிழித்துக் காயத்துக்குக் கட்டுப்போடுகிறாள். மெதுவாக நடந்து வாசலைக்கடந்து, தெருவின் ஓரமாக நடந்துகொண்டே பாடுகிறாள்.]

பாட்டு (10)

நர்மதா : கிண்ணத்தில் பாலெடுத்து-உண்ண எண்ணியபோது
கீழே கவிழ்ந்த கதையாச்சே!– என் வாழ்வு
பாழே அடைந்து பழி ஆச்சே!......ஆ......

1. சின்னஞ்சிறு வயதில் அன்னையை இழந்தேன்
சீர் இளமையில் நான் நிலைகுலைந்தேன்
தன்னந் தனிமையிலே தவித்துயிர் வாழ்ந்தேன்
தாரணி தனில் எனை தாங்குவோர் காணேன்—
(கிண்ணத்தில்)

2. முகத்தின் அழகு கண்டு அகத்தின் ஆழம் பாராமல்
முன்னறிவின்றி நான் காதலித்தேன்
நகத்தினில் சதையென நாம் இணைவோம் என்று
நவின்ற சொல் நம்பிநான் ஏமார்ந்தேன்— (கிண்ணத்தில்)

3. நரிகளின் மத்தியிலே நல்லதோர் ஆடுபோலே
நாட்டினில் இளம் பெண்கள் நலிந்திடவோ
வரிப்புலி யோட்டிய மறக்குலப் பெண்கள் இனி
வாழ்ந்திடும் காலமும் வந்திடுமோ— (கிண்ணத்தில்)

## காட்சி—53

*[இடம்: காளிகோயில் பூசாரியின் அறை. நாதாங்கியை எடுத்து விட்டுக் கதவைத் திறந்துகொண்டு பொன்னி உள்ளே செல்லுகிருள்]*

**பூசாரி:** *என்ன சங்கதி?*

**பொன்னி:** *ஏன்? என்னசங்கதி?*

**பூசாரி:** *நீ எங்கெ போய்ட்டு வாரேன்னு கேக்கறேன்.*

**பொன்னி:** *அட! பெரிய அதிகாரம் பண்றயே! ஏது! ஒண்ணுக்கு ரெண்டுக்குப் போறதுக்குக்கூட உங்கிட்டெ உத்தரவு வாங்கிட்டுத்தான் போகணும்போலெ இருக்குதே!*

**பூசாரி:** *(பல்லை இளித்துத் தலையைச் சொரிந்துகொண்டே) ஓ! வெளிக்குப் போனயா?*

**பொன்னி:** *இல்லே! உள்ளுக்குப் போறுங்கொ! ஆளெப்பாரு (ஒரு குலுக்குக் குலுக்கிக்கொண்டு அப்பால் போகிருள்)*

**பூசாரி:** *அட, நீயொண்ணு! இதுக்கெல்லாங் கோவிச்சுக் கிட்டு! ஆமா! கதவை வெளிப்பக்கமா நாதாங்கி போட்டுட்டுப் போனயே! அது ஏன்?*

**பொன்னி:** *ஏன்? நாதாங்கி போடாமெ, தொறந்து போட்டுட்டுத்தான் போகோணுமாக்கும். அப்பந்தானெ வெளியே சுத்திக்கிட்டிருக்கிற கழுதைகளெல்லாம் உள்ளெ வந்து அடையும்! புத்தியெப்பாரு!*

**பூசாரி:** *எதுக்கெடுத்தாலுங் கோவிச்சுக்கிறயே! சரி, சரி! நீ போய்ப் படுத்துக்கோ.*

**பொன்னி:** *ஏன்? நீ வேறெ பொம்பளயெப் பார்க்கப் போற யாக்கும்?*

**பூசாரி:** *அதென்ன, அப்பிடிச் சொல்லிப்புட்டே!*

**பொன்னி :** ஏன்? நான் சொன்னதிலே தப்பு என்னவாம்? அந்த ரூமுலே அடைச்சு வச்சிருக்கிறீங்களே—அந்தப் பொம்பளயெத்தானே பாத்துட்டு வரப்போறே!

**பூசாரி :** அதெச்சொன்னயா? (பல்லை இளிக்கிறான்)

**பொன்னி :** இளிக்காதே! போய்ட்டுச் சீக்கிரமா வா! வெளியே நாதாங்கியை மாட்டிட்டுப் போ! (அவன் போகிறான். அவள் படுத்துக்கொள்ளுகிறாள். எவனோ அறுவு கெட்டவன் ஒரு பொண்ணைக் கெடுக்கப்பார்க்கறான்! அதிலெ இந்தச் சாம்பராணி "கமிஸினு" வாங்கப்பார்க்கறானே! அடப் பாவிகளா!

**பூசாரி :** (வேகமாக மூச்சு வாங்க உள்ளே வருகிறான்) ஏ! பொன்னி! ஆபத்து வந்திருச்சே! ஆபத்து!

**பொன்னி :** (படுக்கையில் எழுந்து உட்கார்ந்துகொண்டு) ஏன்? என்ன சங்கதி?

**பூசாரி :** அவளைக் காணமே! அந்தப்பொண்ணே!

**பொன்னி :** காணமா? அதுக்கு நீயேன் இந்தப்பாடு பட்றே!

**பூசாரி :** ஐயையோ அவன் வந்துடுவானே! மொரட்டுப் பய லாச்சே! கொண்ணுபுடுவான் கொண்ணு!

**பொன்னி :** கொல்லுட்டும்! நீ செஞ்ச வேலைக்கு உனக்கு வேணும்! (பூசாரி விசனத்தோடு உட்கார்ந்துகொள்ள, பொன்னி அவனைப் பார்த்துக் கண்சிமிட்டிப் புன்னகையுடன் தலையசைத்து நையாண்டி செய்கிறாள்) மச்சான்! இனி மேலெ, இந்தமாதிரி வேலையிலே எறங்றதில்லேண்ணு சொல்லி எங்கைமேலே அடிச்சு, சத்தியம் பண்ணிக்குடு—ஒனக்கு உதவி பண்றேன்.

**பூசாரி :** அப்பிடியா? கைமேலெ என்ன, தலைமேலெ வேணும் ணாலும் அடிச்சுச் சத்தியம் பண்றேன். (அவள் கையில் அடித்துச் சொல்லுகிறான்) 'இனிமேலெ இப்பிடி வேலை யிலே – சத்தியமா – எறங்கமாட்டேன்!"

**பொன்னி :** சத்தியத்தை மறந்த்றமாட்டயே, மச்சான்!

## காட்சி - 54

[இடம் : காளிகோயில் – ஒரு கார் வந்து நிற்கிறது. அதில் இருந்து பாலன் இறங்கி வருகிறான். பூசாரி ஓடி வருகிறான்]

**பூசாரி :** ஐயா ! மோசம் போச்சுங்களே !

**பாலன் :** என்ன ? என்ன ? ஓடீட்டாளா ?

**பூசாரி :** ஓடலீங்க !

**பாலன் :** சரி, சரி ! மற்ற சங்கதியிருந்தா, அப்புறம் பார்க்கலாம். (அறைப்பக்கம் வேகமாகப் போகிறான் – பூசாரி பின் தொடர்ந்து போய்க்கொண்டே)

**பூசாரி :** ஐயா ! என் பெஞ்சாதியெ......

**பாலன் :** அதெல்லாம் அப்புறம் பார்க்கலாம்......... (ரூமைத் திறந்து பார்த்துத் திடுக்கிடுகிறான்) யார் இவள் ?

**பூசாரி :** என் பெஞ்சாதிங்க !

**பாலன் :** அவள் எங்கே ?

**பூசாரி :** அதுதானுங்க சொல்ல ஆரம்பிச்சேன்......

**பாலன் :** சொல்ல ஆரம்பித்துக்கொண்டிருக்காதே ! சீக்கிரம் சொல் ! இல்லாவிட்டால் உன் கழுத்தைப்பிடித்து நெறித்து விடுவேன் !

**பூசாரி :** இரவிலே ரெண்டுபேர் வந்தானுங்க !

**பாலன் :** ரெண்டுபேர் ! யார் அந்த ரெண்டுபேர் ?

**பூசாரி :** தெரியாதுங்க !

**பாலன் :** ஊம் ! பிறகு ?

**பூசாரி :** கத்தியெக் காட்டி மெறட்டி என்ணையும் கட்டிப் போட்டுட்டு, என் பெஞ்சாதியையும் கட்டி அறையிலே போட்டுப் பூட்டுப் போட்டுட்டு அந்தம்மாளைத் தூக்கிட்டுப் போயிட்டானுக !

**பாலன் :** இரண்டுபேர் ! யாராக இருக்கும் ! (யோசித்தபடியே நடைபோடுகிறான்) சரி ! (வேகமாகப் போய்விடுகிறான்) [பூசாரி பொன்னியின் கட்டுகளை அவிழ்த்துவிடுகிறான்]

**பொன்னி :** எப்படி மச்சான் என் வேலே ?

**பூசாரி :** "நீ சரியான வேலைக்காரி போ! நீ சொல்லிக்கொடுத்த மாதிரியே சொன்னேன்! அந்தப் பயெ அப்பிடியே நெச முண்டு நம்பீட்டான்" (சிரிக்கிறான்)

**பொன்னி :** நல்ல மச்சான்! (அவன் கன்னத்தில் மெதுவாக அடிக்கிறாள்)

## காட்சி – 55.

[இடம் : ராஜனின் வீட்டு வாசற்படி, அங்கு உலறந்துகிடந்த இரத்தத்தைச் சந்திரன் பார்க்கிறான்]

**சந்திரன் :** ராஜா! இங்கே வா! (ராஜன் வந்தவுடன் இரத் தத்தைச் சுட்டிக் காட்டி) இதைப் பாரு!

**ராஜன் :** (குனிந்து பார்த்துவிட்டு) இரத்தமா?

**சந்திரன் :** இரத்தம்தான்! உன் காதலியின் இரத்தம்.

**ராஜன் :** என்ன சொல்லுகிறாய்?

**சந்திரன் :** நீ அவளை வெளியே தள்ளிக் கதவை அடைத்தாயே, அப்பொழுது அவள் இங்கே விழுந்திருக்கிறாள்! அடிபட்டு இரத்தம் சிந்தியிருக்கிறது. இதோ! அவள் கட்டியிருந்த புடவையிலிருந்து கிழிக்கப்பட்ட துணி! காயத்தைத் துடைத்த துணி!

**ராஜன் :** (துணியைக் கையில் வாங்கிப் பார்க்கிறான், இரத்தம் அதில் உறைந்துகிடக்கிறது. பெருமூச்சு விடுகிறான்) என் உள்ளமாகிய வானத்தில் மின்னலாகத் தோன்றி இடி இடித்து மறைந்தாள்!

**சந்திரன் :** நீ துடிதுடித்துப் போனாய்!.

**ராஜன் :** சந்திரா! அவள் மட்டும் நல்லவளாக இருந்திருந்தால்! அவளை ஏன் சந்தித்தேன்? அவளுக்கு ஏன் அத்தனை அழகு!

**சந்திரன் :** உன்னைப்போன்ற வாலிபரின் மனதைக் கொள்ளை கொள்ள.

**ராஜன் :** மனதை மட்டுமா? பொருளையும் உயிரையுமல்லவா கொள்ளையடித்தாள்.

**சந்திரன் :** ......என்று...... பாலன் நம்மை நம்பவைத்தான்.

**ராஜன் :** நீ சொல்வது விளங்கவில்லையே! (விழிக்கிறான்)

**சந்திரன் :** பாலன்மேல் எனக்கு நம்பிக்கையில்லை.

**ராஜன் :** ஏன்?

**சந்திரன் :** சொல்லுகிறேன் வா. (உள்ளே சென்று உட்காருகிறார்கள்) ராஜா! நீயும் நர்மதாவைக் காதலிக்கிறாய்! அவனும் அவளைக் காதலிக்கிறான்!

**ராஜன் :** அதனால்?

**சந்திரன் :** அதனால் சதி செய்தான்.

**ராஜன் :** அப்படியா? விஷமிட்டது யார்?

**சந்திரன் :** நீ அந்த டீயைக் குடிக்கும் முன்பாக அவன் அங்கு இருந்தது உனக்கு ஞாபகம் இருக்கிறதா?

**ராஜன் :** ஆம்! இருந்தான்.

**சந்திரன் :** அவன்தான் எப்படியோ, டீயில் விஷம் கலந்திருக்கிறான்!

**ராஜன் :** (யோசித்துக்கொண்டே நடைபோடுகிறான்) அந்தக் கடிதம்?

**சந்திரன் :** பாலனால் எழுதப்பட்டதுதான்!

**ராஜன் :** எப்படித் தெரியும்?

**சந்திரன் :** அது உண்மையான கடிதமாயிருந்திருந்தால் அதை நெருப்பில் கொளுத்தியவர் நிச்சயமாக முழுக் கடிதத்தையும் கொளுத்தியிருப்பார். வேண்டுமென்றே இக்கடிதம் கொஞ்சமாக எரிக்கப்பட்டு, அணைக்கப்பட்டிருக்கிறது.

**ராஜன் :** அப்படிச் செய்ததன் நோக்கம்?

**சந்திரன் :** என்னுடைய கையில் அக்கடிதம் கிடைக்கவேண்டுமென்பதும், அதைப் படித்து, அவளைக் கொள்ளைக் காரியாகவும் கொலைகாரியாகவும், நாம் எண்ணும்படி செய்யவேண்டுமென்பதும் நோக்கம்.

**ராஜன் :** நீ சொல்லுவதில் உண்மை இருக்கலாமென்றே தோன்றுகிறது. ஆனால் போனில் வந்த செய்தி?

**சந்திரன் :** போனில் பேசியதும் பாலனாகத்தான் இருக்கும். போனில் கேட்ட சத்தம் அவன் குரல்போலவே இருந்தது! குரலைக்கொஞ்சம் மாற்றிப் பேசியிருக்கிறான். அவ்வளவு தான்.

**ராஜன் :** அவனே கொலைசெய்ய முயற்சி செய்துவிட்டு அவனே போனில் பேசுவானு ?

**சந்திரன் :** அப்படியல்ல. அவன் கெட்டிக்காரன்! நர்மதா கொலைசெய்ய முயன்றதாக நம்மை நம்பவைக்கவேண்டும். அதற்காக, விஷம் கொடுத்தான். அந்த விஷம் எப்படிப் பட்டதென்பதை அவன் நன்ருய் அறிந்திருப்பான். ஒரு வேளை தனது குற்றம் வெளிப்பட்டாலும் உனக்கு மரணம் ஏற்படாதிருந்தால் தானும் தப்பித்துக்கொள்ளலாம் என்பது அவன் எண்ணமாக இருந்திருக்கும். அதனுல் தான் போனில் செய்தி சொல்லியிருக்கிருன்.

**ராஜன் :** (சிறிது யோசனை செய்தபின்) அப்படியானுல் நர்மதா ஏன் ஓடிவிட்டாள் ?

**சந்திரன் :** அவள் ஓடிவிட்டாள் என்று நாம் நம்பும்படி செய்தவனும் பாலன்தான். அப்படிப்பட்ட கொள்ளையும் கொலையும் செய்திருந்தால் அவள் இங்கே வந்திருப்பாளா ? யோசித்துப் பார் !

**ராஜன் :** நீ அவளுடைய அறைக்குப் போனபோது அவள் அங்கே இல்லையே ?

**சந்திரன் :** பாலன் அவளைக் கடத்திச் சென்றிருப்பான்.

**ராஜன் :** இங்கு எப்படி வந்தாள் ?

**சந்திரன் :** அவனிடமிருந்து தப்பி வந்திருப்பாள்.

**ராஜன் :** அவள் அவனைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையே !

**சந்திரன் :** சொல்வதற்கு நீ விட்டிருந்தால்தானே ! "நான் சொல்வதைக் கேளுங்கள் !" என்று கெஞ்சினுளே ! கேட்டாயா ? நீ சொல்வதை நான் கேட்பதா ?" என்று உருட்டினுய் ! மிரட்டினுய் ! விரட்டினுய் !

**ராஜன் :** அப்படியானுல் அவள்.........

**சந்திரன் :** குற்றமற்றவள் ! அவள் முகத்தில் களங்கத்தின் சாயல் காணப்படவில்லை !

**ராஜன் :** குற்றமற்றவள் ! நர்மதா குற்றமற்றவள் ! (உட்கார்ந்து சற்று நேரம் யோசிக்கிருன்) சந்திரா ! அந்த பாலனைப் பற்றிய உண்மைகளைத் துப்பறியப்போகிறேன்.

## காட்சி – 56

[இடம்: நடனக் கொட்டகை—முகமூடி தரித்த இரு உருவங்கள் நூலேணி வழியாக ஏறி, சன்னல் வழியே பாலனின் அறைக் குள் இறங்குகின்றன.]

## காட்சி – 57

இடம்: பாலனின் அறையின் உட்புறம். பீரோக்களின் பின்புறம் முகமூடி உருவங்கள் இரண்டும் மறைந்துகொள்கின்றன. அறையின் கதவு திறக்கப்படுகிறது. பாலனும் மற்றொரு வனும் உள்ளே வருகின்றனர்]

**பாலன்:** வீரப்பா! காரியம் அவ்வளவும் கெட்டுப்போச்சு!

**வீரப்பன்:** ஏன்? என்ன சங்கதி?

**பாலன்:** நர்மதாவெக் கொண்டுபோயி – நேற்று ராத்திரி காளிகோயில் ரூமிலே பூட்டிவச்சு, அந்தப் பூசாரியைக் காவலா வெச்சிட்டு வந்தேனு. காலையிலே அங்கெ நான் போன போது அவ அங்கே இல்லே!

**வீரப்பன்:** அப்படியா? என்ன ஆச்சு?

**பாலன்:** யாரோ ரெண்டுபேர் நேற்று ராத்திரி வந்தானுகளாம். அந்தப் பூசாரியின் பெண்சாதியெக் கட்டி ரூமிலே போட்டுப் பூட்டிப்புட்டு, அவனையுங் கட்டிப்போட்டுட்டு, நர்மதாவைக் கூட்டிட்டுப் போய்ட்டானுங்களாம்.

**வீரப்பன்:** ரெண்டுபேரா? யாராயிருக்கும்? அந்த ராஜனும் சந்திரனுமா இருக்குமோ? (பீரோவின் மறைவிலிருந்த உருவங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளுகின்றனர்)

**பாலன்:** அவர்களாயிருக்கமுடியாது.

**வீரப்பன்:** ஏன்?

**பாலன்:** ராஜன் நேற்றிரவெல்லாம் ஆஸ்பத்திரியில் இருந்தான். சந்திரன் அவனுக்கு உதவி செய்துகிட்டிருந்தான். அதனாலே இந்த ரெண்டுபேர் வேறெ! அந்த ரெண்டுபேர் வேறெ!

**வீரப்பன்:** வேறெயாகத்தான் இருக்கவேணும்! யாராயிருக்கும்?

**பாலன்:** நர்மதாவுடைய ரூமிலே நான் கருக்கிப் போட்ட கடுதாசியும் சந்திரன் கையிலே கெடச்சுது.

**வீரப்பன் :** உனக்கெப்படித் தெரியும்?

**பாலன் :** அதிகாலேலே நான் அந்தப் பயல்களைப் பார்க்றதுக்குப் போயிருந்தேன். அவனுக பேசியதிலிருந்து, நர்மதாவை-கொலேகாரிண்ணும், கொள்ளேக்காரிண்ணும், கள்ளக் காதலிண்ணும் நம்பியிருக்கிருனுகண்ணு தெரிஞ்சுபோச்சு. (சிரிக்கிருன்) நானும் தகுந்தமாதிரி பேசி அவனுகளெ அப்படியே நம்பவச்சுட்டேன். ஆனுல் எல்லாப்பாடும் வெட்டிப்பாடாப் போச்சே! அவ குடியிருக்ற ரூமுக்குப் போய்ப்பார்த்தேன். அங்கேயும் காணும்! எங்கேதான் போயிருப்பாளோ தெரியலேயே!

**வீரப்பன் :** அந்தப் பணம் என்னுச்சு! அந்த ரூ. 5000/-?

**பாலன் :** பணமெல்லாம் பத்திரமாகத்தான் இருக்குது. (எழுந்து சென்று பீரோவைத்திறந்து தனது தோற்பையை எடுத்து வந்து மேஜைமேல் வைத்துத் திறந்து 100 ரூபாய் நோட்டுக் கற்றைகளை எடுத்து வைக்கிருன்.) இதோ இந்த அஞ்சு கட்டிலே ரூ. 5000/- (இருவர்மீதும் இரண்டுமுகமூடி உருவங்களும் பாய்கின்றன. பலத்த சண்டை நடைபெறுகிறது. பலபொருள்கள் உருண்டு உடைபடுகின்றன. கடைசியில் பாலனும் வீரப்பனும் கட்டப்படுகின்றனர். முகமூடிகளிருவரும் மேஜைமீதிருந்த தோற்பையில் அந்த ரூ. 5000/-த்தையும் வைத்துப் பூட்டி எடுத்துக்கொண்டு நூலேணி வழியாக வெளிப்பக்கம் இறங்கி அங்குதயாராக இருந்த காரில் ஏறி உட்கார்ந்தபின் முகமூடிகளைக் கழற்றிவிட்டனர்)

**ராஜன் :** அவள் எங்கேயிருப்பாள்?

**சந்திரன் :** எவள்?

**ராஜன் :** அவள்தான்! "நர்மதா"

**சந்திரன் :** அவளேத்தான் பார்த்துக் கேட்கவேண்டும்— "நீ எங்கே இருக்கிருய்?" என்று.

---

## காட்சி – 58

[இடம் : ராஜனின் இருப்பிடம். ராஜன் ஆழ்ந்த யோசனையுடன் நடைபோடுகிருன்.]

**சந்திரன் :** பாலன் நம்மெ நல்லா ஏமாத்திட்டான்.

**ராஜன் :** பாவம்!... அவ எங்கெ போறளோ!

**சந்திரன் :** நீதான் அவளெ விரட்டியடிச்சிட்டயே!

**ராஜன் :** சந்திரா! எரிகின்ற தீயில் எண்ணெய் ஊற்றுகிறாய்! வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுகிறாய்!

**சந்திரன் :** என் மேலெ கோபிச்சு என்ன பலன் ராஜா! நானுந்தான் முதல்லே நம்பிட்டேன்-அவ-குற்றவாளீண்ணு.

**ராஜன் :** ஹூம்! அவளா குற்றவாளி! எது அவள் செய்த குற்றம்? கண்டவர் மனதைப்பறிக்கும் கட்டழகு பெற்றிருந்தது அவள் செய்த குற்றமா? நடனம் பார்க்கச் சென்று நயமாகப் பேசிய என்னை நல்லவனென்று நம்பிவிட்டது அவள் செய்த குற்றமா? "கண்ணே!" என்று அழைத்த போதெல்லாம் "அன்பே" என்று பதில் கூறியும் கன்னி கழியாமல் தன்னைக்காத்து நின்றாளே! அது அவள் செய்த குற்றமா? எது குற்றம்? எது குற்றம்? நாயினுங் கேடாக வைத்து அவளை நான் ஏசியும் பேசியும் "நான் சொல்வதைக் கேளுங்கள்" என்று கெஞ்சினாளே! அது அவள் செய்த குற்றமா? கொள்ளைக்காரி நீ! கொலைகாரி நீ! கள்ளக்காதலி நீ! என்று கூசாமல் கூறியதைக் கேட்டுப் பேசாமல் துடிதுடித்தாளே! அது அவள் குற்றமா? தொண்டை கிழியப் பேசித் தள்ளி அவள் மண்டையை உடைத்தேனே! அது அவள் குற்றமா? ஐயோ! (தலையைச் சுவற்றில் மோதிச் சுவற்றுடன் சாய்ந்தபடி நின்றுவிம்முகிறான்) எது குற்றம் சந்திரா? எது குற்றம்? பேசாமல் இருக்கிறாயே!

**சந்திரன் :** பாவம்! அறைநப்பெண்! (கன்னத்தில் வழிந்த இருசொட்டுக் கண்ணீரை ஆள்காட்டி விரலால் வழித்தெடுத்துச் சுண்டுகிறான்)

**ராஜன் :** (திடீரென்று விழித்தெழுந்தவனைப்போல்) சந்திரா!... அவள்...ஒருவேளை...தற்கொலை...

**சந்திரன் :** சீச்சீ! அவள் அப்படிப்பட்டவளல்ல! அறிவுடையவள்! கன்னித்தன்மையைக் காக்கத் தவறிவிட்டு, அறிவு கெட்டு, கருத்தரிக்கிறார்களே—அப்படிப்பட்டவர்கள் தற்கொலை செய்துகொள்ள ஓடுவார்கள்—ஒரு கிணற்றுக்கோ—அல்லது கடலுக்கோ—அல்லது மலையின் உச்சிக்கோ. நர்மதா அந்த வகையைச் சேர்ந்தவளல்ல.

**ராஜன் :** அவளைத் தேடிப்பார்ப்போம் வா?

**சந்திரன் :** எங்கே போய்த் தேடுவது?

**ராஜன் :** எங்காவது போய்த் தேடுவோம்!— அவள் கிடைக்கும் வரை!

---

## காட்சி – 59

[இடம் : நடனக்கொட்டகை : நடனம் ஆரம்பமாகிறது. நர்மதாவுக்குப் பதிலாக வேறொரு பெண் தோன்றி நடனம் ஆடுகிறாள்]

**ரசிகர்களில் சிலர் :** நர்மதா ! நர்மதா ! நர்மதா எங்கே ? நர்மதா எங்கே ! நர்மதாவே நடனம் ஆடவேண்டும் ! (கூச்சலும் சீழ்க்கையும்)

**பாலன் :** (மேடைமீது தோன்றி) ரசிகப்பெருமக்களே ! ஒரு வேண்டுகோள் ! நர்மதாதேவிக்கு உடல்நிலை சரியில்லாத காரணத்தால் அவருக்கு பதிலாக வேறோர் சிறந்த நடன மாதை அமர்த்தியிருக்கிறோம்.

**ரசிகரில் ஒருவர் :** நீங்கள் சொல்வது உண்மையா என்று தெரிவதற்காக நர்மதாவை மேடைக்குக் கொண்டுவந்து காட்டுங்கள்.

**ரசிகர்கள் பலர் :** ஆம் ! நர்மதாவை நேரில் பார்த்தாகவேண்டும். நர்மதாவைக் கொண்டுவா ! நர்மதாவைக் கொண்டுவா ! (கூச்சல்) (திரை விழுகிறது கூச்சலும் சீழ்க்கையும் அதிகரிக்கின்றன. பாலன் மேடைமீது தோன்றுகிறான்.)

**பாலன் :** கனவான்களே ! மன்னிக்கவேண்டும் ! நர்மதாவைக் காணவில்லை ! தயவுசெய்து .. (கூச்சல் அதிகமாகிறது)... தயவுசெய்து... (குழப்பம் ஏற்படுகிறது. சிலர் மேடைமீது பாய்கிறார்கள். நாற்காலிகள் தூக்கி எறியப்படுகின்றன. திரைகள் கிழிக்கப்படுகின்றன. கொட்டகைக்கு காலிகள் நெருப்பு வைக்கிறார்கள். கொட்டகை பற்றி எரிகிறது. தீயணைக்கும் படை வீரர் வந்து தீயணைக்கிறார்கள்)

## காட்சி – 60

[இடம் : பாலன் தன் அறையில் கைகளைப் பின்புறம் கோர்த்த படி நடை போடுகிறான்.]

**பாலன் :** நான் செய்த பாவத்திற்குத் தண்டனை கிடைத்து விட்டது. கண்ணகியின் கற்பு அன்று மதுரையை எரித்தது என்பது மெய்யோ, பொய்யோ—ஆனால் நர்மதாவின் கற்பு என் கொட்டகையை எரித்துவிட்டது ! என் நடனக் குழுவையும் கலைத்துவிட்டது. நான் உடனே ஊரைவிட்டு ஓடவேண்டியதுதான். இங்கே தாமதித்தால் நடனக் குழுவினருக்கும் மற்ற கடன்காரர்களுக்கும் பணத்திற்குப்பதில்

சொல்லியே தீரவேண்டும். கிடைத்த பணத்தையும் முக மூடித் திருடர்கள் தட்டிக்கொண்டு போய்விட்டார்கள். எங்காவது போய், பிழைப்புக்கு வழிபார்க்கவேண்டியது தான். (கைப்பெட்டியை எடுத்துக்கொண்டு போகிறுன்.)

## காட்சி – 61

இடம் : தஞ்சாவூர் அரண்மனைத்தெரு–வீதியில் நர்மதா போய்க் கொண்டிருக்கிருள். கால்கள் தள்ளாட ஒரு வீட்டின் வெளித் திண்ணையில் உட்காருகிருள். மயக்கமாகப் படுத்துவிடு கிருள். அந்த வீட்டுக்காரி கமலம் அவளைப் பார்த்து விடுகிருள். பக்கத்தில் வந்து நர்மதாவின் முகத்தைப் பார்த்துவிட்டு)

**கமலம் :** மாமா ! மாமா ! இங்கெ வந்து பாரு ! யாரோ ஒரு பொண்ணு மயக்கமாகப் படுத்திருக்குது !

**மாமா :** (வந்துபார்த்து) இவளெ வீட்டுக்குள்ளே தூக்கீட்டுப் போலாம்மா ! பொண்ணு நல்ல அழகா இருக்கு !

(இருவரும் நர்மதாவை வீட்டுக்குள் தூக்கிச் செல்கிருர்கள்)

## காட்சி – 62

[இடம் : கமலத்தின் வீடு. நர்மதா படுக்கையில் படுத்திருக் கிருள். டாக்டர் வந்து சிகிச்சை செய்துவிட்டு]

**டாக்டர் :** காயம் ஒன்றும் அபாயமானதல்ல. சீக்கிரம் குண மாகிவிடும். மன அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. நல்ல ஓய்வு வேண்டும். இரண்டு நாள் படுக்கையில் இருந்தால் பூரண சுகம் கிடைக்கும். நான் வருகிறேன்.

**கமலம் :** சரீங்க ! வணக்கமுங்க !

**டாக்டர் :** வணக்கம் !

## காட்சி – 63. (Double scene.)

[இடம் : (1) ராஜனின் இருப்பிடம்-ராஜன் படுக்கையில் உட் கார்ந்திருக்கிருன்.]

[இடம் : (2) நர்மதா–படுக்கையில் முழங்கை யூன்றிச் சாய்ந்து படுத்தபடி.]

பாட்டு (11)

நர்மதா : விதியும் சதியும் தாம் விளையாட்டில் இறங்கினால்
வேதனைப் படுவது யாரோ !

ராஜன் : விதியும் சதியும் தாம் விளையாட்டில் இறங்கினால்
வேதனைப்படுவது யாரோ !

நர்மதா : ஆதரவே ஆகுமென்று ஆசையினால் அகமகிழ்ந்தேன்
பாதகமே விளையுமென்று பாவியேன் நான் அறியேனே

ராஜன் : ஆதரவே ஆகுமென்று ஆசையினால் அகமகிழ்ந்தேன்
பாதகமே விளையுமென்று பாவியே நான் அறியேனே.

இருவரும் : காண்பதற்கும் வழியுமில்லை! கண்டாலும் பயனுமில்லை!
ஏன் பிறந்தேன் ! ஏன் பிறந்தேன் ! ஏன் பிறந்தேன் !

## காட்சி - 64.

*[இடம் : ராஜனின் இருப்பிடம்—ராஜன் படுக்கையில் படுத்திருக்கிறான். சந்திரன் வந்து ராஜனின் அருகில் உட்காருகிறான்]*

**சந்திரன் :** *ராஜா ! நடனக் கொட்டகையும் தீப்பிடிச்சு எரிஞ்சு போச்சு ! நடனக்குழுவும் கலஞ்சுபோச்சு ! ஒரு இடம் பாக்கி இல்லாமெ நர்மதாவெத் தேடிப்பாத்தாச்சு. புறப்பட்டு வரச்சொல்லி உங்க அப்பாகிட்டெ இருந்து லெட்டரும் வந்தாச்சு ! இனிமே இங்கெ இருக்றதிலே என்ன பலன் ?*

**ராஜன் :** *நர்மதா ! என் இதயராணி !*

**சந்திரன் :** *தைரியத்தெக் கைவிடாதெ ராஜா ! என்றைக்காவது ஒரு நாள் அவள் நிச்சயம் உனக்குக் கிடைப்பா. ஊருக்குப் புறப்படலாம் ! என்ன ?*

**ராஜன் :** *ஹூம் ! சரி !*

## காட்சி - 65.

*[இடம் : நர்மதா படுத்திருக்கும் அறை. சேட் ஒருவன் உள்ளே வந்து கதவை உட்பக்கம் பூட்டிவிட்டுத் திறவு கோலைத் தன் சட்டைப் பையில் போட்டுக்கொள்கிறான். நர்மதாவைப் பார்த்துப் புன்னகை செய்கிறான். அவனைக்கண்ட நர்மதா பயந்துபோய், படுக்கையை விட்டு எழுந்து]*

**நர்மதா :** நீ யார் ?

**சேட் :** அரே ! சபாஷ் ! "நல்லமாதிரிப் பொண்ணு" சொன்னுள் இந்த வீட்டுத்தாசி கமலம். ரொம்பா சரி ! ரொம்பாசரி ! அஹ்ஹஹ்ஹஹா ! (சிரிக்கிருன்)

**நர்மதா :** நீ யார் என்று கேட்கிறேன் ! பதில் வேண்டும் !

**சேட் :** பதில் வேணும் ? அரரே ! நல்லாப் பேசரான் ! நல்லாப் பேசரான் ! ஏ ! பொண்ணுரை ! நம்பள்கி சேட்சி இருக்ருன்.

**நர்மதா :** ஏ சேட் ! நீ எதற்காக இங்கே வந்தாய் ? (கோபமாய்)

**சேட் :** அரரே! பொண்ணு கோபம் செய்ருன்! சேட், "கோபம் வேண்டாம்" சொல்ருன். (சேட் கட்டிலின்மேல் உட்கார்ந்து கொள்ளுகிருன்) - இங்கே-இப்டி-பொண்ணுரை-உட்கார்ரான் ?- அப்போ சேட்சி பதில் சொல்ருன்.

**நர்மதா :** இல்லே ! இங்கேயே இருக்கிறேன். சொல் ! எதற் காக இங்கே வந்தாய் ?

**சேட் :** இந்த ஊர்லே, நம்பள் படேசேட் இருக்ருன். இந்த ஊட்லேகி இருக்ருன் தாசி கம்லம் !...... நிம்பள்கி தெரியரான் ?... தாசி கம்லம் நம்பள்கிட்டே வர்ரான்..." சேட்ஜி ! ஒண்ணும் நம்பர் பொண்ணு, நம்பள் ஊட்லே இருக்ருன் ! சேட் 100 ருபா கொடுக்ருன் ? நம்பள் பொண்ணு "சரிஜீ" பண்ருன் – இப்படி சொல்ருன்-இந்த ஊட்லேகி தாசி நம்பள்கி சொல்ருன். "அரே ! கம்லம்! நம்பள் வந்து பொண்ணு பாக்ருன்–அப்றம் பணம் கொடுக் ருன்" – கம்லம் "சரி" சொல்ருன்–இப்போ நம்பள்கி இங்கு வர்ரான்–நிம்பள்கி பார்க்ருன்– "அச்சா ! அச்சா ! சொல்ருன்–100 ருபா கம்லம் தாஸிகி கொடுக்ருன்–அப்றம் உள்ளே வர்ரான்–கதவு பூட்ருன்–கட்லுக்கு மேலே உட்கார் ரான் ! இப்போ நிம்பள்கி தெரியரான் ? ஹி, ஹி, ஹி– (சிரிக்கிருன்)

**நர்மதா :** இந்த வீட்டுக்காரி ஒரு தாசியா !

**சேட் :** அரே ! பொண்ணுரா ! நம்பள்கி தமாஷ் பண்ருன் ஹே- ஹிஹிஹி (சிரிக்கிருன்)

**நர்மதா :** ஏ ! சேட் ! நான் தாசியல்ல ! மரியாதையாக வெளியே போகிருயா ? இல்லையா ?

**சேட் :** வாரே வாஹ் ! வெளையாட்ரான் ! பொண்ணு, நம்பள்கி மேலே வெளையாட்ரான் ! (பல்லே இளிக்கிருன்)

**நர்மதா :** நீ 100 ருபாய் கொடுத்திருக்ருய்-இல்லேயா ? இந்தா இந்தச் சங்கிலியை அந்த ருபாயுக்குப் பதிலாக எடுத்துக் கொள்-வெளியே போ ! (தன் கழுத்துச் சங்கிலியைக் கழற்றிக் கட்டிலின்மீது வீசி எறிகிருள்)

**சேட் :** (சங்கிலியைக் கையில் எடுத்துப்பார்த்து) இது ரு. 200/- விலே இருக்ருன். சேட் ஜாஸ்தி கேக்ருன். பொண்ணு செயின் கொடுக்ருன் ! அரே பொண்ணு ! நிம்பள்கு பணம் கேக்ருன் ? நம்பள்கி குஷிமேலே கொடுக்ருன். நம்பள் இங்கே செயின் வேணும் வர்ரானில்லே ! ஜல்சா வேணும் வர்ரான் ! நிம்பள் ஜாஸ்தி செய்ருன்-நம்பள் போருன் ! இல்லே ! நம்பள் போரானில்லே ! நிம்பள் தெரியரான் ? (சங்கிலியைக் கட்டில்மேல் எறிகிருன்)

**நர்மதா :** (சற்று யோசனை செய்து) சேட் ! உனக்கு ஜாஸ்திதான் வேண்டும் ! அப்படித்தானே ?

**சேட் :** நிம்பள் சரியாச் சொல்ருன் ! சரியாச் சொல்ருன் !

**நர்மதா :** சரி சேட் ! நம்பள் சேட்ஜிக்கு ஜாஸ்தி கொடுக்ருன். சேட்ஜி பால் சாப்பிட்ருன் ? பட்சணம் சாப்பிட்ருன் ?

**சேட் :** பஹுத் அச்சா ! பஹுத் அச்சா ! பொண்ணு நம்பள்கி ஜல்சா செய்ருன் ! பால் கொடுக்ருன். பட்சணம் கொடுக்ருன் ! அரே ! ஜல்தி ! ஜல்தி கொண்டுவர்ரானில்லே !

**நர்மதா :** கொண்டுவர்ரான் ! (சமையல் அறைக்குள் போய் விட்டுத் திரும்பி வந்து) சேட்ஜிக்கு நம்பள் பல்காரம் கொடுக்ருன் ! சேட் வாயெத் தொறக்ருன்-நம்பள் வாயிலே போட்ருன் !

**சேட் :** அச்சா ! ஏக்துஜி ஹை ! நிம்பள் நம்பள் வாய்லே போட்ருன் ? ஜாஸ்தி ! ஜாஸ்தி ! இப்பொ நம்பள் வாயெத் தொறக்ருன். (சேட் ஆவென்று வாயைத் திறக்க...)

**நர்மதா :** இந்தப் பொண்ணுக்கி சேட் வாயெத் தொறக்ருன் ! அச்சா ! (கையில் வைத்திருந்த மிளகாய்ப்பொடியில் பாதியைச் சேட்டின் வாயில் போடுகிருள்.)

**சேட் :** அரேராம் ! (தும்மல்) அரேராம் ! (தும்மல்) ஐயையோ (தும்மல்) ஆ !......ஆ !......) (அலறுகிருன்)

**நர்மதா :** சேட் ! இப்போ கண்ணை மூட்றுன். (மீதியிருந்த மிளகாய்ப் பொடியை அவன் முகத்தில் வீசியடிக்கிருள்–சேட் அலறித் துடிக்கிருன்–குதிக்கிருன்–கீழே விழுந்து புரளுகிருன்–திணருகிருன். அவனுடைய சட்டைப் பையிலிருந்த திறவுகோலை நர்மதா எடுத்துக்கொள்ளுகிருள். ஒரு போர்வையை அவனுக்கு அடியில் விரித்து அவனை ஒரு மூட்டையாகக் கட்டிக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டுக் கட்டிலின்மேல் கிடந்த தனது கழுத்துச் சங்கிலியை எடுத்துக்கொள்கிருள். கதவைத் திறந்துகொண்டு வெளியேறுகிருள். அங்கே நின்றுகொண்டிருந்த கமலம் திறந்த வாயுடனும் விரித்த கைகளுடனும் "என்னம்மா செஞ்சே !" என்று கேட்டு நடுங்குகிருள். நர்மதா அவளை முறைத்துப் பார்த்து) நீ ஒரு தாசிதானு ? இந்தத் தொழிலில் ஈடுபடுத்தவா எனக்குச் சிகிச்சை செய்து காப்பாற்றிஞய் ? பேராசை பிடித்தவளே ! ஒரு பெண்ணின் கற்பை நூறு ரூபாயுக்குத் தானு விலை மதித்தாய் ? இதோ ! எனக்குச் சிகிச்சை செய்ததற்குக் கூலி ! எடுத்துக்கொள் (சங்கிலியை அவள் முகத்தில் எறிந்துவிட்டு நடந்து செல்கிருள்.)

**கமலம் :** ஹூம் ! உன்னைக்கொண்டு எவ்வளவோ பணம் சம்பாதிக்கலாண்ணு நெனச்சேன். கண்ணிலே மொளகாப் பொடி போட்ட மாதிரி செய்திட்டுப் போறயே !

**நர்மதா :** மாதிரி என்ன ! மாதிரி ! மிளகாப் பொடியேதான் போட்டிருக்றேன் ! என் கற்பைக் காப்பாற்றிக்கொள்ள ! (வெளியே போகிருள்)

---

## காட்சி – 66

[இடம் : புதுக்கோட்டையில் கோபால் பிள்ளையின் வீடு–ராஜன் நினைவிழந்து நோயாளியாகப் படுத்திருக்கிருன்–அவனுடைய தாயும் தந்தையும் அவன் பக்கத்தில் அமர்ந்திருக்கிருர்கள்.]

**தந்தை :** இனி ஆபத்து ஒண்ணுமில்லேண்ணு டாக்டர் சொன்ருரு. தூக்கத்தெக் கலேச்சிடாதே ! தூங்கட்டும் !

**தாய் :** சரிங்க ! (தந்தை போகிருர்)

**ராஜன் :** (மெதுவாகக் கண்களைத் திறந்து சுற்றிலும் பார்த்தபடி) அம்மா !

**தாய் :** அப்பா ராஜா! உனக்கு நல்லாப் போச்சு மகனே! இனி ஒண்ணும் பயமில்லேண்ணு டாக்டர் சொன்னரு! மூளையிலே அதிர்ச்சி ஏற்பட்டதனுலே இப்படியாச்சுண்ணு டாக்டர் சொன்னரு–அதிர்ச்சிக்குக் காரணத்தையும் சந்திரன் சொன்னன். ஒண்ணுக்கும் நீ கவலைப்படாதே! நீ ஆசைப் பட்ட பொண்ணையே தேடிப்பிடிச்சு உனக்குக் கல்யாணம் செய்துவைக்கிறேம்.

**ராஜன் :** (முகமலர்ச்சியுடன்) அப்படியா! நீ ரொம்ப நல்லவ எம்மா! அப்பா என்ன சொன்னரு?

**தாய் :** அவர் வேறெ என்னப்பா சொல்லப்போருரு–உன் பிரியப் படியே செய்திடலாம்ணுதான் சொன்னரு.

**ராஜன் :** அப்படியா! அப்பாவும் ரொம்ப நல்லவரு!

**தாய் :** இந்தப் பத்து நாளா நாங்கபட்ட மனவேதனை! ஊ...ம்!

**ராஜன் :** பத்து நாளா?

**தாய் :** ஆமப்பா! இந்தப் பத்து நாளா நீ படுத்த படுக்கையா இருந்தே–இன்னிக்குத்தானே கண்ணெத் தொறந்தே!

**ராஜன் :** அப்படியா? சந்திரன் எங்கேம்மா?

**தாய் :** இப்பொ வந்துடுவான். டாக்டர் மருந்துக்குச் சீட்டு எழுதிக்கொடுத்தாரு. மருந்து வாங்கப் போயிருக்குறன். அவனெப்போல ஒரு சினேகிதன் கெடைக்கிறது ரொம்ப அபூர்வமப்பா! நேத்துக் கோயம்புத்தூரிலிருந்து தந்தி கூட வந்துது–அவனெ உடனே புறப்பட்டு வரச்சொல்லி.

**ராஜன் :** என்ன தந்தி?

**தாய் :** அவனுக்கு மகன் பிறந்திருக்குறனும்!

**ராஜன் :** அப்படியா! சந்தோஷம்! பின்னெ ஏன் சந்திரன் இன்னும் போகாமெ இருக்குறன்?

**தாய் :** நீ கண்திறந்து பேசினபிறகுதான் போவானும்!

**ராஜன் :** ரொம்ப நல்லவன்!

**தாய் :** அதோ! அவனும் வந்துட்டான்! சந்திரா! வாப்பா! ராஜன் உன்னெ எங்கே எங்கேண்ணு கேட்டுகிட்டே இருக்குறன்.

**சந்திரன் :** அடெ! (ஓடிவருகிறன்) பேசிட்டானு?......ராஜா!

**ராஜன் :** சந்திரா !

**சந்திரன் :** எனக்கு மகன் பிறந்திருக்குன் தெரியுமா ?

**ராஜன் :** தெரியுமே !

**சந்திரன் :** ஓ ! அம்மா சொல்லிட்டாங்களா ! ராஜம் ! ஒரு நாளைக்கு உனக்கும் நர்மதாவுக்கும் கல்யாணம் நடக்கத் தான்போகுது ! உங்களுக்கு முதல் குழந்தை பெண் குழந்தையாப் பிறக்கத்தான் போகுது ! அந்தக் குழந்தைக்கு "சந்திரா"ன்னு பேர் வைக்கணுமாக்கும் – அவதான் எனக்கு மருமகள் ! தெரியுதா ? (மூன்று பேரும் சிரிக்கிருர்கள்) ராஜு ! நான் நாளைக்கு ஊருக்குப் போய் என் மகனெப் பார்த்துட்டுத் திரும்பிவர்ரேன்.

**ராஜன் :** இன்னிக்கே புறப்படு சந்திரா !

---

## காட்சி – 67

[இடம் : திருச்சி-அனுதைப் பெண்கள் விடுதி.
**பாத்திரங்கள் :** விடுதித்தலைவி, நர்மதா, வேறு இரு பெண்கள்.]

**தலைவி :** (முதல் பெண்ணைப் பார்த்து) நீ யாரம்மா ? உன் பெயர், ஊர், பெற்ருேர், நீ அனுதையான விபரம்–எல்லாம் சுருக்கமாகச் சொல்.

**முதல் பெண் :** (எழுந்து நின்று) அம்மா ! என் பெயர் ராஜம். வயது 16. ஊர்-மானுமதுரை. 8-வது வரை படிச்சிருக்கிறேன். சினிமாவிலே நடிக்க ஆசைப்பட்டேன், "புது முகங்கள் தேவை"ங்கிற விளம்பரம் ஒண்ணைப் பார்த்தேன். எங்க வீட்டிலுள்ளவங்களுக்குத் தெரியாதபடி புறப்பட்டு வந்துட்டேன். விளம்பரத்திலே இருந்த முகவரிப்படி கம்பெனியெத் தேடிக்கண்டுபிடிச்சேன். என்னை உடனே சேர்த்துகிட்டாங்க. ஆனல் அந்த ராத்திரியே என்னைக் கற்பழிச்சுட்டாங்கோ (கண்ணைத் துடைக்கிருள்.)

**தலைவி :** அழாதேம்மா ! அழாமெச் சொல்லு !

**முதல் பெண் :** அது ஒரு போலிக்கம்பெனின்னு பிறகுதான் தெரிஞ்சுது ! வேறெவழியில்லாமெ விபசாரத் தொழில்லே எறங்கினேன். ஒருநாள் போலிஸார் வந்து "இரவு ராணி"ன்னு கைது செய்தாங்க. விசாரணை நடந்தது. என்னெ இங்கே அனுப்பிவச்சிருக்குங்கோ !

**தலைவி :** சரி ! உன்னிடம் பிறகு பேசிக்கொள்கிறேன். நீ இந்தச் சீட்டை எடுத்துக்கொண்டு உள்ளே போ ! (முதல் பெண் போகிருள்) (இரண்டாவது பெண்ணைப் பார்த்து) உன் வரலாறு என்னம்மா ?

**2-வது பெண் :** என் பெயர் ராதா ! எனக்கு வயது 22. நான் ஒரு பள்ளி ஆசிரியை-நான் ஒருவனைக் காதலித்தேன். அவனும் நானுமாக எங்கள் ஊரைவிட்டுப் புறப்பட்டோம். கையிலுள்ள பணம் தீரும்வரை பல ஊர்கள் சுற்றிேைம். கடைசியில் இந்த ஊருக்கு வந்தோம். என்னுடைய நகைகளையும் விற்றுச் செலவுசெய்தோம். கடைசியாக இருந்த என் மோதிரத்தை வாங்கிக்கொண்டு போனுன்-விற்றுப் பணம் வாங்கி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனவன் திரும்பி வரவேயில்லை. மறுநாள் அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. " உன் வழியை நீ பார்த்துக்கொள் ! என் வழியே நான் போகிறேன் " என்று அதில் எழுதியிருந்தது. மனம் உடைந்து சாப்பாட்டுக்கும் வழியின்றிப் பிச்சையும் எடுத்தேன்-இந்த ஊரிலுள்ள அத்தனை பள்ளிகளிலும் எனக்கு வேலை கிடைக்கவில்லை. தற்கொலை செய்துகொள்ள விஷம் அருந்தினேன். ஆனால் மருத்துவ நிலையத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டேன். அங்கே என்னைப் பிழைக்க வைத்து அனுப்பிவிட்டார்கள். எனக்காக வாழ்ந்தாயிற்று. இனிப் பிறருக்காக வாழ விரும்புகிறேன். இந்த விடுதியில் சேர்த்து என்னை ஆதரியுங்களம்மா ? நான் அனுதை ! (கண்ணீர் வடித்துக்கொண்டு நிற்கிருள்)

**தலைவி :** பள்ளி ஆசிரியையாக இருந்தும் இவ்வாறு நீ புத்தி கெட்டுப்போனது பரிதாபத்துக்கு உரியகாரியம். இனிமேலாவது ஒழுங்காக நடந்துகொள். இந்தச் சீட்டை எடுத்துக்கொண்டு உள்ளே போ ! (மூன்ருவது பெண்ணைப் பார்த்து) நீ யாரம்மா ?

**நர்மதா :** நானும் ஒரு அனுதையம்மா ! என் பெயர் மல்லிகா. ' நர்மதா ' என்றும் என்னை அழைப்பார்கள். எனக்கு வயது 18. என் ஊர் மதுரை. என்னை 60 வயது கிழவனுக்கு மணமுடிக்க ஏற்பாடு செய்தார்கள். நான் வீட்டை விட்டு வெளியேறினேன். S. S. L. C. தேர்வு பெற்றிருக்கிறேன். நல்லவர்களின் உதவி பெற்று ஒரு நடனக் குழுவில் சேர்ந்தேன். நான் ஒருவரைக் காதலித்தேன். அவரும் என்னைக் காதலித்தார். மணம் முடிக்க எண்ணிேைம். வேஞெருவன் சதி செய்து எங்களைப் பிரித்தான். நடனக் குழுவும் கலைந்தது. நான் அனுதையானேன். இந்த விடுதி

யில் இல்லாவிட்டாலும் வேறு எங்காவது எனக்குப் பிழைப்புக்கு ஒரு வழி காட்டுங்கள் அம்மா !

**தலைவி :** மருத்துவ விடுதியில் சேர்ந்து நர்ஸாக வேலை செய்யப் பிரியமா ?

**நர்மதா :** பிரியந்தான். ஆனால் அந்த வேலை கிடைப்பது...

**தலைவி :** அதைப்பற்றிக் கவலை வேண்டாம். நாளைக் காலை பத்து மணிக்கு, புதுக்கோட்டை மருத்துவ விடுதியில் நர்ஸ் வேலை பழக்குவதற்காக ஆள் எடுக்கிறார்கள். நான் கடிதம் கொடுக்கிறேன். அதைக் கொண்டுபோய்க் கொடு. கண்டிப்பாக உன்னை எடுத்துக்கொள்ளும்படி எழுதுகிறேன். (கடிதத்தை எழுதிக் கொடுக்கிறாள்.)

**நர்மதா :** (கடிதத்தை வாங்கிக்கொண்டு) மிக்க நன்றி ! போய் வருகிறேனம்மா ! வணக்கம் !

**தலைவி :** வணக்கம் !

---

## காட்சி – 68

[இடம் : கோபால் பிள்ளையின் பங்களா – தோட்டக்காரன் முருகனின் வீடு. ஒரு பரதேசி வருகிறார்.]

பரதேசி : (பாட்டு)

**சங்கரா ! சிவ சங்கரா ! சிவ-சங்கரா ! சிவ சங்கரா !**

**சங்கரா ! சிவ சங்கரா ! சிவ-சங்கரா ! சிவ சங்கரா !**

**முருகன் :** ஏ ! லச்சுமி ! சாமியாருக்கு அரிசிகொண்டுவந்து போடு.

**பரதேசி :** அப்பனே ! அரிசியை வாங்கி அடியான் என்ன செய்வேன் ? ஒரு வேளை அன்னமிடு அப்பனே ! நடராஜப் பெருமான் தன் அடியாரை ஆதரிப்பவருக்கு அனுக்ரகம் செய்வான்.

**முருகன் :** ஆகட்டுஞ்சாமி ! சாப்பிட்டுட்டுப் போங்க ! லச்சுமீ ! சாமியாருக்குஞ் சேத்துச் சமையலாகுட்டும் ! உட்காருங்க சாமீ !

**பரதேசி :** சிவசிவ ! ஓம் நமசிவாய (உட்காருகிறார்) உன் பெயரென்ன அப்பனே ?

**முருகன் :** எம் பேரு முருகனுங்க.

**பரதேசி :** நல்ல பெயர் ! – வடிவேலனின் பெயர் ! முருகனுக்கு எத்தனை குழந்தைகள் ?

**முருகன் :** முருகனுக்குக் குழந்தைகள் உண்டா சாமீ ? வள்ளி, தேவானேண்ணு ரெண்டு பெஞ்சாதிகதானே சாமீ !

**பரதேசி :** அந்த முருகனுக்கல்ல அப்பனே ! இந்த முருகனுக்கு !

**முருகன் :** புள்ளெகுட்டி விஷயத்திலே இந்த முருகனும் அந்த முருகனும் ஒண்ணுதானுங்க !

**பரதேசி :** இந்தச் சிவனடியானுக்கு ஒருவேளை அன்னமிட்டவர் ஒரு ஆண் மகவைப் பெறுவர்.

**முருகன் :** அப்பிடீங்களா ! பெண் கொழந்தை வேணும்ணு ஒரு வேளை காபி கொடுக்கணுங்ளோ ?

**பரதேசி :** (திடுக்கிட்டுப் பிறகு சமாளித்துக்கொண்டு) ஆம், அப்பனே !

**முருகன் :** அப்படீன்னு, இங்கெ ஒரு ரெண்டு மூணு நாளைக்கு இருந்துட்டுப் போங்க சாமி ! எம் பெஞ்சாதி கொழந்தை வேணும் கொழந்தை வேணும்ணு வெநாயகனெச் சுத்திச் சுத்தி வந்துகிட்டிருக்கு. புள்ளெ குட்டீண்ணு அவளுக்கு உசிருங்க.

**பரதேசி :** இந்தச் சிவனடிமை ஒரு வீட்டில் ஒரு வேளைக்குமேல் உணவு பெறுது அப்பனே ! உனக்கு ஒரு ஆண் குழந்தை அடுத்த வருஷம் பிறக்கும் என்று நான் சொன்னால் நீ அதை நம்பலாம் அப்பனே ! உன் கையை நீட்டு. (முருகன் கையை நீட்டுகிறான். அவனது கை மயிரில் இரண்டைத் தன் இரு விரல்களால் பிடுங்கிக் கைகளைத் தலைக்கு மேல் பின்புறம் கொண்டுபோய்) சிவசிவ ! நமசிவாய ! ஓம் ! நமசிவாய ! ஓம் ! நமசிவாய ! உன் கையை நீட்டு அப்பனே ! (முருகன் கையை நீட்டுகிறான். பரதேசி அவன் கையில் திருநூறு போடுகிறான்- மயிர் திருநீறானதைக் கண்ட முருகன் பய பக்தியுடன் எழுந்து உடல் முழுதும் தரையில் படும்படி படுத்துக் கும்பிடுகிறான். தன் மனைவியைக் கூட்டி வருகிறான்)

**முருகன் :** லச்சுமீ ! சாமி பெரிய மவானுடீ ! மயிரெப் பிடுங்கித் திருநீறு பண்ணிருச்சு ! மேலைக்கு நமக்கு ஆண் கொழந்தெ பொறக்கும்ணு சொன்னுருடீ ! விழுந்து கும்பிடுடீ ! சாமி, இவளுக்குங் கொடுங்க திருநீறு ! (அவள் விழுந்துகும்பிட, பரதேசி அவளுக்கு திருநீறு கொடுக்கிறார்) திருநீற்றை வாங்கிக்கொண்டு அவள் உள்ளே போக, முருகன் பயபக்தியோடு உட்காருகிறான்.)

**பரதேசி :** இந்தப் பங்களாவிலே இருப்பது யாரப்பனே !

**முருகன் :** எங்க எசமானுங்க ! கோபால் புள்ளேண்ணு பேரு. அவருக்கு ஒரு மவனுங்கோ ! அவரு, எசமானியம்மா, சின்ன எசமானரு, இந்த மூணேபேருதானுங்க.

**சாமி :** வேறு யாருமே இல்லையா ? உற்றார், உறவினர் யாருமில்லையா ?

**முருகன் :** யாருமில்லேங்கோ !

**சாமி :** சின்ன எசமானருக்குக் கல்யாணம் ஆகவில்லையா ?

**முருகன் :** இல்லிங்கோ ! அவுங்க யாரோ ஒரு பொண்ணெ—நருமதா தேவீண்ணு பேராம் ! – அந்தப் பொண்ணெத்தான் கண்ணாலம் பண்றதுண்ணு இருக்குரு. அந்தப் பொண்ணு எங்கிருக்குதுண்ணே தெரியலே ! ஏஞ்சாமி, இதெல்லாங் கேக்றீங்க ?

**சாமி :** விசேஷம் ஒன்றுமில்லெ ! எதையாவது பேசிக்கொண்டிருக்க வேணுமே ! அதற்காகத்தான் கேட்டேன்.

**லட்சுமி :** ஏனுங்க ! எலே போடட்டுமா ?

**முருகன் :** கைகால் அலம்பத் தண்ணி கொண்டா. எழுந்திருங்க சாமி, சாப்பிடலாம். (சாமியார் எழுந்திருக்கிறுர்.)

## காட்சி – 69

[இடம் : மருத்துவ விடுதி : படுக்கையொன்றில் சாமியார் படுத்திருக்கிறுர். நர்ஸ் மல்லிகா சிகிச்சை செய்கிறுள். நோயாளி அவள் முகத்தையே முறைத்துப் பார்க்கிறுன். கண்கள் அகல விரிகின்றன. எழுந்திருக்க முயற்சி செய்கிறுன்.]

**மல்லிகா :** நீங்கள் எழுந்திருக்கக் கூடாது. உயிருக்கு ஆபத்து ஏற்படும் !

**நோயாளி :** உயிருக்கா ? ஆபத்தா ?... காப்பாற்றப்போகிறுயா ? நீயா ?...

**மல்லிகா :** பேசாமல் படுத்திருங்கள் ! பேசவும் கூடாது !

**நோயாளி :** தீமை செய்தவனுக்கு நன்மை !

**மல்லிகா :** பாவம் ஜன்னியால் பிதற்றுகிறுர் ! டெலிரியம் !

**நோயாளி :** பிதற்றலல்ல !... உங்கள் வாழ்வை... அதோ ! அவரும் வந்துவிட்டார் !

**மல்லிகா :** எவர் ? (நோயாளியின் பார்வை சென்ற திசையில் பார்க்கிருள்.) "ராஜன் !" (திடுக்கிடுகிருள். சமாளித்துக் கொண்டு தன் முகத்தை நோயாளியின் பக்கம் திருப்பியபடி சிகிச்சை செய்துகொண்டிருக்கிருள்.)

**ராஜன் :** (அருகில் வந்து நின்று) வணக்கம் ஸிஸ்டர் ! இந்தச் சாமியார் எங்கள் வீட்டின் எதிரில், ரஸ்தாவில், கார் விபத்துக்குள்ளாஞர். இவரை இங்கு கொண்டுவந்து சேர்த்தேன். பிழைத்துக்கொள்வாரா ?

**நோயாளி :** மிஸ்டர்-ராஜன் !

**ராஜன் :** அடெ ! சாமியாருக்கு என் பெயர் தெரிந்திருக்கிறதே !

**நோயாளி :** என் பக்கத்தில் வாருங்கள் ! என் உயிர் போகுமுன்-உங்களிடம் – மன்னிப்புக் கேட்கவேண்டும் – நான் – சாமியாரல்ல – இதோ ! (பொய்த்தாடி மீசைகளைப் பிடுங்கி எறிகிருன்.)

**மல்லிகா, ராஜன் (இருவரும்) :** ஆ ! பாலன் !

**நோயாளி :** ஆம் ! பாலன்தான் ! குற்றமற்ற பெண்ணரசியைக் கொலைகாரியாகக் காட்டியவன். மயில் - விஷம் - கலந்தவன் - என்னை "மன்னித்தேன்" என்று சொல்லுங்கள்.

**ராஜன் :** பாலன் ! என்ன ஆச்சரியம் ! மன்னித்துவிட்டேன் பாலன் !

**பாலன் :** (மல்லிகாவின் பக்கம் திரும்பி) அம்மா ! உன்னைப்-பேர் சொல்லி – அழைக்கவும் – நான் – என்னை – மன்னித்துவிடு – நர்மதா !

**ராஜன் :** நர்மதா ! ... நர்மதா ! ... (அவனையறியாமல் அவன் வாய் சொல்கிறது) (பாலனின் தலை சாய்கிறது-உயிர் நீங்குகிறது-மல்லிகா கண்களில் நின்ற கண்ணீரைத் துடைக்கிருள். கடைக்கண்ணுல் ராஜனைப் பார்த்துவிட்டுப் போய் விடுகிருள்.)

---

## காட்சி – 70

[இடம் : கோபால் பிள்ளை வீடு : ராஜன் சோபாவில் உட்கார்ந்திருக்கிருன்.]

**ராஜன் :** அம்மா !

**ராஜன் :** அவன் செத்துப்போய்ட்டானம்மா. அவென் சாமி யாரே அல்ல ! அவன்தான் பாலன் !

**தாய் :** பாலனு ? அது யாரப்பா—பாலன் !

**ராஜன் :** அவன்தான்-என் வாழ்வெயும் நர்மதாவின் வாழ்வெயும் பாழாக்கினவன்.

**தாய் :** அட பாவி ! சாமியார் வேஷத்திலே எதுக்கு வந்தான் ?

**ராஜன் :** நர்மதாவைத் தேடிக் கண்டுபிடிக்றதுக்குத்தான்.

**தாய் :** நர்மதா எங்கெ இருக்குளாம் ?

**ராஜன் :** அதே மருத்துவ நிலையத்திலே நர்ஸா இருக்ரும்மா ! அவளெ நான் பார்த்தேனம்மா ! அவனுக்கு அவதான் சிகிச்சை செய்தா.

**தாய் :** அப்படியா ? உங்கூடப் பேசினுளாப்பா ?

**ராஜன் :** இல்லையம்மா ! பேசவுமில்லே ! என் முகத்திலே முழிக்கவுமில்லெ ! முகத்தெ வேறெ பக்கம் திருப்பிகிட்டா

**தாய் :** ஏன் ?

**ராஜன் :** ஏனு ? அவ வாழ்வெப் பாலைவனமாக்கிய இந்தப் பாவி முகத்திலெ முழிக்கப்படாதுண்ணுதான் (துக்கம் தொண்டையை அடைக்கிறது.)

**தாய் !** (மகனருகில் சென்று நின்று அவன் தலையை நீவிக் கொடுத்து) இல்லே மகனே ! பெண் மனம் நீ நினைக்ற மாதிரி கல்மனமல்ல மகனே ! பேசாமெப் போனதுக்குக் காரணம் வெறுப்புத்தாண்னு சொல்லமுடியாது ! துக்கமும் காரணமா இருக்கலாமில்லேயா ? எதுக்கும் நானே போய்த் தெரிஞ்சிட்டு வாரேன்.

## காட்சி — 71

[இடம் : தோட்டக்காரன் வீடு]

**முருகன் :** ஏ, லச்சுமி, அந்தச் சாமியாரெக் கொண்டுபோய் மருத்துவ சாலேயிலே சேர்த்தாங்கல்ல—அவன் செத்துப் போனுண்டி !

**லட்சுமி :** அப்படியா ? (சற்று நேரம் மௌனத்திற்குப்பிறகு...) ஆமா, அந்தச் சாமியார் கொடுத்த வரமென்னுகிறது ?

**முருகன் :** சரியாப் போச்சு போ! அவன் சாகற சங்கதியே அவனுக்குத் தெரியாமெப் போச்சு! அவன் குடுத்த வரந் தள்ளுது போ! போய் வேலெயெப்பாரு!

## காட்சி – 72

[மல்லிகாவின் அறை : மல்லிகா உட்கார்ந்திருக்கிருள். கதவு திறக்கப்படுகிறது-சரோஜாவும் ராஜனின் தாயாரும் உள்ளே வருகிருர்கள்.]

**சரோஜா :** மல்லிகா! இந்த அம்மாள் உன்னைப் பார்க்க வேண்டுமென்று வந்திருக்கிருர்கள்.

**மல்லிகா :** அப்படியா? வாருங்கள் அம்மா! (நாற்காலி ஒன்றை இழுத்துப்போடுகிருள்) உட்காருங்கள்!

**ராஜனின் தாய் :** நீங்க ரெண்டு பேரும் நிக்கறீங்களே!

**மல்லிகா :** அதனுல் என்ன? நீங்கள் பெரியவர்கள். நாங்கள் சிறியவர்கள்தானே! நீங்கள் யாரம்மா? உங்களுக்கு என்ன வேண்டும்?

**சரோஜா :** உன் வார்டில் இருந்தாரே சாமியார்! அந்தச் சாமியாரைக் கொண்டுவந்து சேர்த்தது-இந்தம்மாளுடைய மகன்தானும்!

**மல்லிகா :** ஓ......! (திடுக்கிட்டு-ராஜனின் தாயாரை உற்று நோக்குகிருள்.)

**ராஜனின் தாயார் :** ஏம்மா! உங்க பேரு மல்லிகாதானு?

**மல்லிகா :** ஆமாம்மா! ஏன்?

**ராஜனின் தாயார் :** (கட்டிலில் இருந்த குழந்தையைப் பார்த்து விட்டு) அது யார் குழந்தையம்மா?

**மல்லிகா :** என் குழந்தை.

**ராஜனின் தாயார் :** அந்தச் சாமியாருக்கு நர்ஸாயிருந்த பொண்ணுப் பேரு நர்மதாண்ணு கேள்விப்பட்டேன். நர்மதா எங்களுக்கு ரொம்ப வேண்டிய பொண்ணு! பார்த்துட்டுப் போகலாம்ணு வந்தேன். இங்கெ வந்து கேட்டா அந்தப் பேருள்ள "நர்ஸே" இங்கெ ஒருத்தரும் இல்லீங்கருங்க. நான் வர்ரேம்மா (எழுந்திருக்கிருள்.)

**மல்லிகா :** காபி சாப்பிட்டுட்டுப் போங்கம்மா !

**ராஜனின் தாயார் :** காபியா ? வேண்டாம்மா !

**மல்லிகா :** டீ ?

**ராஜனின் தாயார் :** நான், டீ, காபி ஒண்ணும் சாப்பிட்றதில் லேம்மா ! போய்ட்டு வரட்டுமா ?

**மல்லிகா :** போய்ட்டு வாங்கம்மா ! வணக்கம்.

**ராஜனின் தாயார் :** வணக்கம் !

**சரோஜா :** வணக்கம்மா !

**ராஜனின் தாயார் :** வணக்கம்மா ! (போகிறாள்)

**சரோஜா :** மல்லிகா ! என்னிடம் கூடச் சொல்லாமெ ஏதேதோ ரகசியங்களை உன் மனதிலெ வச்சிருக்கிறெ ! நர்மதாங்ற பேரிலே ஏதோ ரகசியம் இருக்கத்தான் செய்யுது ! அந்த நோயாளி அன்றைக்கு "நிர்மலா ! நிர்மலா !" ண்ணு கூப்பிட்டாரு. இன்றைக்கு இந்தம்மா "நர்மதா ! நர்மதா" ண்ணு தேடி அலையுது ! என்னதான் இரகசியம் சொல்வேன் !

**மல்லிகா :** சரோஜா ! இன்றைக்கு என் சொந்தக் கதையை – உண்மையான வரலாற்றை உனக்குச் சொல்லப் போறேன். உட்கார்ந்து கேள் ! (சரோஜா உட்காருகிறாள்.)

## காட்சி – 73

[இடம் : கோபால் பிள்ளை வீடு – ராஜன் தாயாருக்காக வெராந்தாவில் நடந்துகொண்டே காத்திருக்கிறான் – தாயார் வந்ததும்]

**ராஜன் :** பார்த்தயாம்மா ?

**தாய் :** வெட்டி அலைச்சல் மகனே !

**ராஜன் :** ஏம்மா ?

**தாய் :** நர்மதாங்ற நர்ஸே அங்கெ கிடையாதே !

**ராஜன் :** பாலனுக்கு நர்ஸா இருந்தவ ?

**தாய் :** அவ வேறொருத்தியப்பா ! அவ பேரு 'மல்லிகா' வாம் !

**ராஜன் :** இல்லையம்மா ! அவள் நர்மதாவேதான் ! சாகிறதுக்கு முந்தி பாலன்கூட ''நர்மதா''ண்ணுதான் கூப்பிட்டானம்மா !

**தாய் :** அந்தப் போலிச்சாமியார் ஜன்னி வெறியிலெ ஏதாவது உளறியிருப்பானப்பா !

**ராஜன் :** இல்லையம்மா ! நானும் என் கண்ணுலெ பார்த்தனே ! நர்மதாவேதானம்மா !

**தாய் :** நீ சும்மா இரப்பா ! வெக்கக்கேடு ! மல்லிகா ஒரு பிள்ளைக்குத் தாயா இருக்கு ! அவளெப் போயி ''நர்மதா'' ''நர்மதா''ண்ணு சொல்லிகிட்டு.

**ராஜன் :** என்ன ! ஒரு பிள்ளைக்குத் தாயா ? அப்படியானு அவ நர்மதா இல்லையா ?...... இல்லையம்மா ! அவ நர்மதாவே தான் – என் கண்கள் என்னை ஏமாற்றலையம்மா !

**தாய் :** அப்படியானு, குழந்தை ?

**ராஜன் :** குழந்தை !...... குழந்தை ! (சற்று யோசனை செய்து கொண்டே நடக்கிறான்)... இல்லையம்மா ! அது என் குழந்தையல்ல ! நர்மதா எனக்கு மனைவியாக இருந்ததில்லை ! அவள் கன்னித்தன்மையை நான் பறிக்கவில்லையம்மா !

**தாய் :** குழந்தை யாருடையதுண்ணு கேட்டேன். ''என் குழந்தை'' தான்னு சொன்னாளே ! நீ அவளெக் கன்னிப் பொண்ணுங்றெ ! அப்படியானு,! ''கன்னியின் குழந்தை !'' யா ? எனனப்பா !

**ராஜன் :** அம்மா ! நானே போய் நேரிலே பார்த்திட்டு வர்ரேன். (போய்விடுகிறான்)

## காட்சி – 74.

[இடம்: மல்லிகாவின் அறை: கதவில் ''டக்டக்'' என்று தட்டும் சத்தம்.]

**மல்லிகா :** யாரது ? உள்ளே வாருங்கள் ! (ராஜன் உள்ளே வருகிறான்.) (மல்லிகா எழுந்து நிற்கிறாள். இருவர் கண்களும் சந்திக்கின்றன. இருவர் கண்களிலும் கண்ணீர் தேங்கி நிற்கிறது. உதடுகள் துடிக்கின்றன.)

**ராஜன் :** நர்மதா !

**மல்லி :** என் பெயர் "மல்லிகா".

**ராஜன் :** இல்லையில்லை ! நீ என் நர்மதா !

**மல்லிகா :** உங்கள் நர்மதா இறந்துவிட்டாள் !

**ராஜன் :** இறந்துவிட்டாள் ! இறந்துவிட்டாள் ! என்றால் ! (ஜன்னல் வழியாக வெளியே பார்வையைச் செலுத்தி, ஜன்னல் கம்பிகளைக் கைகளால் பிடித்துக்கொண்டு) அவள் உள்ளத்தைப் புண்படுத்தினேன் ! பேய்போலக் கத்தி, நாய்போலக் குலைத்தேன் ! தன் மனதின் கதவைத் திறந்து காட்டத்தவித்தாள் ! என் அறையின் கதவை மூடிக் களித்தேன் ! விழுந்தாள் ! இரத்தம் சிந்தினாள் ! எழுந்தாள் ! ஓடினாள்–ஓடினாள்–ஓடினாள் ! என் வாழ்வை விட்டு ஓடிவிடவேண்டுமென்று ஓடினாள் ! எனக்கு மன்னிப்பே கிடையாது ! நான் கொடியவன் ! பாதகன் ! பாவி ! (விம்மி விம்மி அழும் சத்தம் கேட்டு மெதுவாகத் திரும்புகிறான். மல்லிகா அழுகையை நிறுத்திவிட்டு, துக்கம் தொண்டையை அடைக்க)

**மல்லிகா :** அவள்தான் கொலைகாரியாயிற்றே ! கொள்ளைக்காரியாயிற்றே ! கள்ளக்காதலி–ஆயிற்றே ! (கண்ணீர் வடித்துக் கொண்டே அவனைப் பார்க்கிறாள்.)

**ராஜன் :** இல்லையில்லை ! அவள் குற்றமற்றவள் ! நானும் சந்திரனும் பாலனின் அறைக்குள் ஒளிந்திருந்து துப்பறிந்தோம். அவன் டீயில் விஷத்தைக் கலந்ததும், ரூ. 5000/– என் பையிலிருந்து திருடிக்கொண்டதும், உன்னைச் சிறை வைத்ததும், ஆகிய எல்லாச் சங்கதிகளையும் அவன் தன் நண்பனிடம் சொன்னதை எங்கள் காதுகளால் கேட்டோம். அவர்களிடம் போர் செய்தோம். அவர்களைக் கட்டிப்போட்டு என் பணத்தையும் மீட்டுக்கொண்டு வந்தோம். பிறகு, நர்மதாவைத் தேடி எங்கெங்கோ அலைந்துதிரிந்தோம். (அவளை இழந்ததால் மூளைக்கொதிப்பு ஏற்பட்டுப்படுக்கையில் பல நாட்கள் கிடந்தேன். நான் பிழைத்தேன்– ஆனால்– ஆனால்– அவள்'

**மல்லிகா :** அவள் இறந்த இடத்திலே– ஒரு கொடி முளைத்தது.

**ராஜன் :** (சட்டென்று மல்லிகாவின் பக்கம் திரும்புகிறான்.) அதுதான் "மல்லிகா" என்ற பூங்கொடி ! மல்லிகா ! மல்லிகா !! என்னை மன்னிக்கமாட்டாயா ?

**மல்லிகா :** மல்லிகாவுக்கு நீங்கள் தீங்கு செய்யவில்லையே ?

**ராஜன் :** நர்மதாவுக்குத் தீங்கு செய்தேனே !

**மல்லிகா :** நர்மதா உங்களை மன்னித்துவிட்டாளே !

**ராஜன் :** இந்தச் சொற்களைக் கேட்க என் காதுகள் எவ்வளவு காலம் தவம் கிடந்தன !

(குழந்தை அழுகிறது. மல்லிகா சென்று குழந்தையை எடுக்கிருள்.)

**ராஜன் :** ஒன்று கேட்கலாமா ?

**மல்லிகா :** கேளுங்கள் !

**ராஜன் :** இது யாருடைய குழந்தை ?

**மல்லிகா :** என் குழந்தை !

**ராஜன் :** உன் குழந்தை ? ''கன்னியின் குழந்தை'' உனக்கு மணமாகிவிட்டதா ?

**மல்லிகா :** ஆம் ! காதல் மணம் !

**ராஜன் :** ஓ ! அப்படியா ? கணவனின் பெயர் ?

**மல்லிகா :** சொல்ல விருப்பமில்லை.

**ராஜன் :** மிக்க நன்றி ! நான் வருகிறேன். (போகிருன்.)

**மல்லிகா :** நில்லுங்கள் ! எப்பொழுது திரும்பவும் வருவீர்கள் ?

**ராஜன் :** (திரும்பி நின்று) எதற்காக வரவேண்டும் ?

**மல்லிகா :** இனிமேலும் என் மனம் பாழடைந்த நிலமாக இல்லாமலிருப்பதற்காக !

**ராஜன் :** (அவளை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்து) நர்மதா !

**மல்லிகா :** என்னை மணந்து உங்கள் மனைவியாக ஏற்றுக் கொள்வதற்காக !

**ராஜன் :** (மேலும் ஒரு அடி எடுத்துவைத்து) நர்மதா !! (சற்று யோசித்துவிட்டு) இந்தக் குழந்தையின் தந்தை உயிருடன்...

**மல்லிகா :** இல்லை ! இறந்துவிட்டார் !

**ராஜன் :** அப்படியா ?...... அப்படியானுல்...... உன்னை மணம் செய்துகொள்ளுகிறேன்...... மகிழ்ச்சியோடு !......

**மல்லிகா :** முன்பு ஒரு முறை, காவிரிக்கரையில், —என்னை மணம் செய்துகொள்வதாகக் கூறினீர்கள். அப்பொழுது மணம் செய்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். இப்பொழுது செய்தால்......

**ராஜன் :** இப்பொழுது செய்தால் ?

**மல்லிகா :** உலகம் சிரிக்கும் !

**ராஜன் :** உலகமா ?

**மல்லிகா :** ஆம் !

**ராஜன் :** சிரிக்கட்டும் ! நன்றாகச் சிரிக்கட்டும் ! அப்படிச் சிரிப்பதைக் கண்டு நான் மகிழவேண்டும். நானும் சிரிக்க வேண்டும். (மல்லிகாவின் இரண்டு தோள்களிலும் தன் இரண்டு கைகளையும் வைத்துக்கொண்டு அவள் கண்களுக்குள்ளே தன் உருவத்தைப் பார்த்தபடி) நானும் சிரிக்க வேண்டும் !

**மல்லிகா :** (அவன் கைகளைப் பற்றியபடி) என்ன சொல்லுகிறீர்கள் ?

**ராஜன் :** நீதான்...என்...உலகம் ! நீ சிரிக்கவேண்டும். நான் மகிழவேண்டும்.

**மல்லிகா :** ஓ !

**ராஜன் :** ஆம் ! நர்மதா ! வீட்டிற்குப் போகலாம் வா. என் பெற்றோரிடம் சொல்லித் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யலாம்.

**மல்லிகா :** என் குழந்தை ?

**ராஜன் :** இனிமேல் அது உன் குழந்தை மட்டுமல்ல ! என் குழந்தையும்கூட.

**மல்லி :** என் வேலை ?

**ராஜன் :** நோட்டீஸ் கொடுத்துவிடுவோம் ! ராஜீனாமா நோட்டீஸ் !

**மல்லிகா :** பிறருக்கு உதவி செய்யும் வேலையைவிட்டு நிற்பதா ?

**ராஜன் :** உனக்கு "நர்ஸ்" வேலைதானே வேண்டும் ? நான் கொடுக்கிறேன். அந்த வேலையை நமக்கு மணமானபின், நீ, எனக்கும், உன் மாமாவுக்கும் அத்தைக்கும் நர்ஸாக இரு! நானும் நீயுமாக, ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும் நர்ஸாக இருப்போம். கிராமங்களுக்குச் சென்று சேவை புரிவோம் ! சரிதானே !

**மல்லிகா :** நீங்கள் நல்லவர்கள் !

**ராஜன் :** இல்லை ! நீதான் நல்லவள் ! வீட்டிற்குப் போகலாமா ?

**மல்லிகா :** இன்றுபோய், நாளை வாருங்கள் !

---

## காட்சி – 75

[இடம் : கோபால் பிள்ளை வீடு.]

**கோபால் பிள்ளை :** ஏன் ? குழந்தையிருந்தா என்ன ? விதவா மணம் நல்லதுண்ணு குழந்தையிருக்கற விதவையெ மணஞ் செய்யிறது அதைவிட நல்லதாச்சே !

**ராஜனின் தாய் :** என்னதான் இருந்தாலும்......உலகம்......ஒரு மாதிரி......பேசுமே !

**கோபால் பிள்ளை :** எந்த உலகம் பேசும் ? 16 வயதுப் பெண்களை 60-வயதுக் கிழவர்களுக்குக் கொடுக்கும் உலகமா ? இளம் விதவைப் பெண்களுக்கு வாழ்வுக்கு வழிசெய்யாமெ அவர்களை வாட்டி வதைக்கிற உலகமா ? ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியும் பேசற உலகமா ? அந்த உலகந் தானே நீ சொல்ற உலகம் ? அந்த உலகம் சிரிச்சா—நாம் அதைப் பார்த்துச் சிரிப்போம் ! நீ அதைப்பற்றிக் கொஞ்சமுங் கவலைப்படாதே ! அந்த உலகம் நாகரிக உலகமல்ல! காட்டுமிராண்டிகள் உலகம்! ராஜன் நல்லவன் ! அவளும் நல்லவள் ! இரண்டுபேரும் மன ஒற்றுமையோடு வாழ்வாங்க !

**ராஜனின் தாய் :** அதுதான் நானும் விரும்பறது. அவுங்க ரெண்டுபேரும் சந்தோஷமாப் பொழச்சாப்போதும்.

## காட்சி – 76.

[இடம் : நர்ஸ்கள் விடுதி : மல்லிகாவின் அறை.
**பாத்திரங்கள் :** மல்லிகாவும் சரோஜாவும்]

**சரோஜா :** மல்லிகா ! டான்ஸ் ஆடத்தெரியும்ணு சொன்னயே ! இன்னிக்கு உன் வாழ்விலே ஒரு நல்ல நாள் ! பிரிந்தவர் கூடினநாள் இல்லையா ? ஒரு டான்ஸ் ஆடேன் !

**மல்லிகா !** நீ பாட்றயா ?

**சரோஜா :** ஓ ! பாட்றேன் !

**மல்லிகா :** சரி ! நான் ஆட்றேன் !

**சரோஜா :** (எழுந்து) இரு இரு ! என் வீணையெ எடுத்துட்டு வந்தர்ரேன்.

(போய் வீணையுடன் வந்து உட்காருகிருள். அதற்குள் மல்லிகாவும் டான்ஸ் ஆடத் தகுந்த உடையும் அணிந்து கொண்டாள். சரோஜா வீணையை மீட்டிக்கொண்டே பாட, மல்லிகா ஆடுகிருள்.)

பாட்டு (12)

1. பஞ்சும் நெருப்பும் பக்கம் இருந்தால்
பற்றி எறியாதோ!
நெஞ்சொடு நெஞ்சம் கொஞ்சம் கலந்தால்
நேசம் விளையாதோ! — (பஞ்சும்)

2. நல்லதோர் வீணையின் நரம்பினை மீட்டால்
நாதம் கிளம்பாதோ !
மல்லிகையை வண்டு மலர்த்திவிட்டால்
மணத்தினை வீசாதோ ! — (பஞ்சும்)

3, கல்லொடு கல்லை மோதவே செய்தால்
கனல் பொறி காணுதோ
சொல்லொடு கண்கள் சோடிஇணைந்தால்
சோதனையாகாதோ — (பஞ்சும்)

[நடனமும் பாட்டும் முடிய, கதவின் வெளிப்பக்கமிருந்து பலர் கைதட்டிச் சிரிக்கும் சத்தம் கேட்கிறது. சரோஜா ஓடிச் சென்று கதவைத் திறக்கிருள். ஐந்து நர்ஸ்கள் உள்ளே வருகிருர்கள்.]

**ஒருத்தி :** அம்மாடீ ! பாட்டும் நடனமும் பிரமாதம் !

**2-ம் நர்ஸ் :** பாட்டை முழுசும் கேட்டோம். நடனத்திலெ, சதங்கை ஒலிமட்டும்தானே கேட்டுது-

**3-ம் நர்ஸ் :** பாவனையெக் கண்ணால் பார்க்கலையே !

**4-ம் நர்ஸ் :** பாவனைதானெ நடனத்துக்கு உயிர் !

**5-ம் நர்ஸ் :** எங்களுக்கும் ஆடிக்காட்டு, மல்லிகா !

**மல்லிகா :** உட்காருங்க (எல்லோரும் உட்காருகிறார்கள்.) டீ சாப்பிடுங்க. (டீ கொடுக்கிறாள்.)

**இரண்டுபேர் :** எங்களுக்கு டீயெல்லாம் வேண்டாம் ! நீ ஆடு !

**மல்லிகா :** முதல்லே நீங்க டீ குடிக்கணும். பிறகுதான் ஆடுவேன். (எல்லோரும் டீ குடித்து முடிந்தபின்)

ஒரே சமயம் { **வீணை : டிங்டிங்...டிடிங்...டிங்;...டிங்டிங்...டிடிங்...டிங்.**
**சதங்கை : ஜல்ஜல் ஜலே ஜல்; ஜல்ஜல்; ஜலே ஜல்.**

---

## காட்சி – 77

[இடம் : ராஜனின் வீடு : கல்யாண அலங்காரங்கள் செய்யப் படுகின்றன. மணமேடை அமைக்கப்படும் இடத்தில் ராஜன் நின்றுகொண்டு மணமேடை ஜோடனை செய்வோருக்கு யோசனை கூறுகிறான்.]

**ராஜன் :** பின்னணியில் சந்திரன் "பேக் க்ரவுண்டா" இருந்தா நல்லா இருக்கும் !

**சந்திரன் :** இதோ ! பின்னணியில் சந்திரன் இருக்கேனே !

**ராஜன் :** (திடுக்கிட்டுத் திரும்பி) அடெ ! சந்திரன் ! கமலா ! அடடெ !. மாப்பிள்ளைப்பயல் ! (கமலாவின் கையிலிருந்த குழந்தையை வாங்கி முத்தம் கொடுக்கிறான்.) வாங்க ! உள்ளெ போலாம்— (போகிறார்கள். குழந்தை அவன் கன்னத்தில் கை வைத்துப் புன்னகை செய்கிறது.) மாப்பிள்ளைப் பயலே ! என்ன வேணும் ?

**சந்திரன் :** மாப்பிள்ளெ பொண்ணு வேணும்ங்றான் !

**ராஜன் :** பெண்ணுக்கு ஆர்டர் கொடுக்கக் கம்பெனி பார்த் திருக்குது.

**சந்திரன் :** "நர்மதா அண்ட் கோ" தானே !
(மூவரும் சிரிக்கிறார்கள். ராஜனின் தாயார் வேகமாக எதிரில் வந்து குழந்தையை எடுக்கிறாள்.)

**தாய் :** சந்திரா ! கமலா ! வாங்க (குழந்தைக்கு முத்தம் கொடுக்கிறாள்.)

கண்ணு, மூக்கு, எல்லாம் அப்படியே அப்பனெ உரிச்சு வச்சிருக்கு !

**சந்திரன் :** கமலா ! நர்மதாவைப் பார்க்கவேணும்னு துடிச்சயே !

**ராஜன் :** அம்மா ! கமலாவெ அழைச்சுப்போய் நர்மதாவை அறிமுகப்படுத்தி வையுங்கம்மா !

**தாய் :** வாம்மா ! நர்மதா அடுத்த அறையிலே ஏதோ வேலையா இருந்தா. போகலாம் வா ! (போகிறார்கள்.)

## காட்சி – 78

[இடம் : கோபால் பிள்ளையின் வீட்டில் பாத்திர அறை– நர்மதா வெள்ளிப் பாத்திரத்தைத் துடைத்துக்கொண்டிருக்கிறாள்.]

**ராஜனின் தாய் :** நர்மதா ! கோயம்பத்தூரிலிருந்து கமலாவும் சந்திரனும் வந்திருக்காங்கம்மா ! இதோ பாரு—கமலாவெ !

**நர்மதா :** வாருங் (என்று ஆரம்பித்தவள் கமலாவைப் பார்த்த வுடன் அப்படியே நிறுத்திவிட்டு...ஆச்சரியத்தில் கண்கள் அகலவிரிய...) கமலா !

**கமலா :** ஆ !...... நிர்மலா! (ஆச்சரியத்தால் கண்கள் அகல விரிகின்றன.) (இருவரும் கட்டித்தழுவிக் கொள்ளுகிறார்கள். கன்னத்தோடு கன்னம் ஒட்டவைத்துச் சில விநாடிகள் அசைவற்று நிற்கிறார்கள்.) நிர்மலா !...... நீதான்...... நர்மதாவா ?

**ராஜனின் தாய் :** சரிதான் ! ரெண்டுபேருக்கும் முதல்லியே பழக்கமோ ?

**கமலா :** இவள் என் பள்ளித்தோழி அம்மா !...

**ராஜனின் தாய் :** அப்படியா ! சரிசரி ! கமலா ! இவளுக்கு மல்லிகாண்ணு வேறெபேரு இருக்குதம்மா !

**கமலா :** நிர்மலா ! என்னடீ இது ! ஏன் இப்படியெல்லாம் பேரெ மாத்திவச்சுகிட்டெ ? ஒருத்திக்கு மூணு பேரா ?

**நர்மதா :** அந்தக் கதெயெல்லாம் அப்புறம் சொல்றேண்டீ ! இது உன் குழந்தையா கமலா ? (ராஜனின் தாயாரிட மிருந்து குழந்தையை எடுத்து முத்தம் கொடுக்கிறாள்.)

**ராஜனின் தாய் :** கமலா ! நர்மதாவுக்கும் ஒரு குழந்தை இருக்குது.

**கமலா :** (விழிக்கிறாள்) என்ன! குழந்தையா? (பக்கத்து அறையில் குழந்தை அழும் சத்தம் கேட்கிறது. நர்மதாவிடமிருந்து கமலாவின் குழந்தையை ராஜனின் தாய் வாங்கிக் கொள்ளுகிறாள்— நர்மதா பக்கத்து அறைக்குள் போகிறாள்— ஒன்றும் விளங்காமல் கமலா விழிக்கிறாள்) ஏம்மா! இவள் விதவையா? (அதற்குள் நர்மதா குழந்தையுடன் வந்துவிடவே ராஜனின் தாய் "ஆம்" என்று சொல்வது போலத் தலையை அசைக்கிறாள்.) முகம் தாயின் சாயல்! ஏண்டீ! நிர்மலா! குழந்தையின் அப்பா எப்போ இறந்தார்?

**நர்மதா :** பத்துமாதங்களாச்சு!

**கமலா :** பாவம்! (குழந்தையை நர்மதாவிடம் கொடுத்துவிட்டுத் தன் குழந்தை அழுததால் அதை வாங்குகிறாள்.)

## காட்சி – 79

[இடம் : கோபால் பிள்ளையின் அறை. கோபால் பிள்ளை தன் மனைவியுடன் உட்கார்ந்திருக்கிறார். சரோஜா அங்கு வருகிறாள்.]

**கோபால் பிள்ளை :** வாம்மா! வா! உக்காரு! (உட்காருகிறாள்) என்னம்மா வேணும்?

**சரோஜா :** ஐயா! மல்லிகாவுக்கு மணம் முடியும்வரை நான் இங்கேயே இருக்கவேணுமென்று நீங்க கேட்டுக்கொண்டீங்க. அதற்கு நன்றி!

**கோபால் பிள்ளை :** ஆமாம்மா! நீயும்கூட இருந்தா அவளுக்கு உற்சாகமா இருக்கும்னு நினைச்சேன். பாவம் அவ ஒரு அனாதைப் பொண்ணுதானேம்மா!

**சரோஜா :** அதுக்காகத்தான் நானும் ஒப்புக்கொண்டேன். ஆனா, நான் வந்து கொஞ்ச நேரத்திலே "அவ விதவை," "ஒரு குழந்தை பெற்றவ" இப்படீன்னு— பலவிதமா— பலபேரு பேசினது, என் காதிலெ விழுந்தது. அவங்க அப்படிப் பேசறதும் நினைக்கிறதும் தவறுங்கொ!

**கோபால் பிள்ளை :** அதிலெ தவறு என்னம்மா இருக்கு? அவ விதவைங்கிறதும், ஒரு குழந்தை பெற்றவங்கிறதும் உண்மைதானே! ஆனா, விதவா மணத்தை நாங்க மனப்பூர்வமா ஆதரிக்கிறவங்களம்மா!

**சரோஜா :** அதுதான் இந்தக் கல்யாணத்துக்கு நீங்க சம்மதங் கொடுத்திருக்கிறதிலயே தெரியுதே ! ஆறு, மல்லிகா எப்படிப்பட்டவங்ற சங்கதி எனக்கு நல்லாத் தெரியும். அந்தக் குழந்தையைப் பற்றிய இரகசியத்தெ வெளிப் படுத்தி...

**ராஜனின் தாய் :** குழந்தயெப்பற்றி ரகசியமா ? அதென்னம்மா ?

**சரோஜா :** சொல்றேம்மா ! குழந்தையைப்பற்றிய இரகசியத்தை வெளிப்படுத்தி அவளெப்பற்றி மற்றவங்க மனசிலிருக்ற தவருன எண்ணங்களைப் போக்கவேண்டியது என் கடமை ஐயா !

**கோபால் பிள்ளை :** அப்படியா சங்கதி ! நீதானம்மா அவளுக்கு உண்மையான தோழி! குழந்தையின் இரகசியமென்னம்மா ?

**சரோஜா :** இந்த வீட்டிலிருக்ற எல்லாரையும் இங்கே வரச் சொல்லுங்க பிறகு சொல்றேன்.

**கோபால் பிள்ளை :** (மனைவியைப் பார்த்து) மதுராம்பா ! நீ போய் எல்லாரையும் பெரிய கூடத்துக்கு வரச் சொல்லேன்.

**ராஜனின் தாய் :** சரிங்க ! (எழுந்திருக்கிறள்.)

**கோபால் பிள்ளை :** ஏம்மா ! நாமும் பெரிய கூடத்துக்குப் போலாமா ?

**சரோஜா :** போலாங்க. (எழுந்திருக்கிருர்கள்.)

## காட்சி – 80.

[இடம் : கோபால் பிள்ளையின் வீட்டிலுள்ள எல்லா இடங்களிலும் " ஏதோ இரகசியம் வெளியாகப் போகுதாம். எல்லாரும் வாங்க ! வாங்க ! " என்ற செய்தி வீடுமுழுதும் பரவ எல்லோரும் பெரிய கூடத்தில் வந்து கூடிவிடுகிருர்கள்.]

**கோபால் பிள்ளை :** சரோஜாதேவி முக்கியமான சங்கதி சொல்லப் போகுது. எல்லோரும் அமைதியா இருந்து கேளுங்க ! சங்கதியெச் சொல்லம்மா சரோஜா !

**சரோஜா!** சுமார் 10 மாதங்களுக்கு முன்பு, ஒரு நாள் என் வார்டிலே, ஒரு பெரியவர் படுத்திருந்தார்.—அவர்—

## காட்சி - 81.

[ இடம் : மருத்துவ நிலையம் - நர்ஸ் சரோஜா டியூட்டியில் இருக்கிருள் - ஒரு கிழவர் பிராணவாயு சிகிச்சையில் இருக்கிருர்.]

**கிழவர்:** நிர்மலா! ......நிர்மலா!......நிர்மலா!

**சரோஜா:** " நிர்மலா " என்பது யார் பெரியவரே ?

**கிழவர் :** என்......என்......மகள் !

**சரோஜா !** எங்கே இருக்கிருள் ?

**கிழவர் :** தெரியா......தெரியாது ! ( மூச்சு வாங்குகிறது )

**சரோஜா :** பாவம் " டெலிரியம் " ( போய் விடுகிருள் )

## காட்சி - 82.

[இடம் மல்லிகாவின் அறை : சரோஜாவும், மல்லிகாவும்]

**சரோ :** மல்லிகா! என் வார்டிலே ஒரு பெரியவர் இருக்கிருர். சீரியஸ் ஆப்ரேஷன் கேஸ்!...............ஆக்ஸிஜன் ட்ரிட் மெண்டலே இருக்கிருர் ! அவர் ஓயாமெ " நிர்மலா ! நிர்மலா ! " ண்ணு சொல்லிட்டே இருக்கிருர். பாவம் ! ( " நிர்மலா " என்ற சொல் கேட்டவுடன் மல்லிகா திடுக் கிட்டாள் ) ஏன் மல்லிகா ? என்ன சங்கதி ? ஏன் பயந்து போனவள் மாதிரி விழிக்கிறே.

**மல்லி :** ஒண்ணுமில்லே! எனக்கு " நிர்மலா "ண்ணு ஒரு தோழி இருந்தா அவ நினைவு வந்தது.

**சரோ :** அவ எங்கே இருக்கிரு ?

**மல்லி :** அவள் இறந்து போனு ! எங்கே இருக்கிருண்ணு ஏன் கேட்கிறே ?

**சரோ :** ஒரு வேளை, நீ சொன்ன நிர்மலா அந்தப் பெரியவரு டைய மகளா இருக்கலாமோண்ணு நினச்சேன். நீ வந்து பாரேன் மல்லிகா! ஒரு வேளை அவர் அந்த நிர்மலாவின் தந்தையாக இருக்கலாமல்லவா ?

**மல்லி !** தந்தையாகவே இருக்கவேணுமா ? ஏன் ?

**சரோ :** நிர்மலா யார்ணு அவரெக் கேட்டேன். என் மகள்ணு சொன்னுரு !

மல்லி: அப்படியா? சரி! நான் வந்து பார்க்கிறேன்.

சரோ: நீ சொன்ன நிர்மலாவின் தந்தையை உனக்கு நன்ருகத் தெரியுமோ?

மல்லி: ஓ! நன்ருகவே தெரியும்! அவரை "அப்பா"ண்ணு அழைப்பேன். அவரும் என்னை "மகளே"ண்ணு கூப்பிடுவார்!

சரோ: அப்படியா? சரி போகலாம் வா!

---

## காட்சி - 83.

[இடம்: சரோஜாவின் வார்டு - சரோஜாவும் மல்லிகாவும் பெரியவர் படுக்கையின் அருகே வந்து நிற்கிருர்கள். பெரியவர் "நிர்மலா" என்ற பெயரை உச்சரித்துக் கொண்டே இருக்கிருர். அவரைக் கண்டதும் மல்லிகா திடுக்கிட்டு முகத்தை மேலே இழுக்கிருள்.

சரோ: ஏன்? அவர்தாஞ?

மல்லி: அப்பா! அப்பா!!

பெரியவர்: யாரு? ... ஆ! ... நீயா!...மகளே! (கைகளைத் தூக்கு கிருர்.)

மல்லி: (அவருடைய கைகளைப் பிடித்துக்கொண்டு கண்ணீர் வடித்தபடி) அப்பா! ...... பேசாமல் படுத்திருங்களப்பா!

பெரியவர்: இனிமே ... பேசமாட்டேன்! ... உன்னைப்பார்க்கத் தான் ...... உயிரை விட்டுடாமே ...... வச்சிருந்தேன்! ...... சௌக்கியமா இருக்கியாம்மா? ......

மல்லி: சௌக்கியம் தானப்பா! அதிகம் பேசாதீர்கள். உயிருக்கு ஆபத்தாகும்.

பெரியவர்: உயிரா? ... இல்லெ ...... பிழைக்கமாட்டேன் ...... ஒரே ஒரு ... கவலெ ...... குழந்தெ ... சித்தி குழந்தை ... (மூச்சு வாங்குகிறது)

மல்லி: சித்தியும் குழந்தையும் எங்கே இருக்கிருங்கப்பா?

பெரியவர்: சித்தி செத்துப்போளு ... பிரசவத்திலே ... இரண்டு மாதமாச்சு!

மல்லி: குழந்தெ?

பெரியவர்: 10-ம் நம்பர் - அனுமார் கோயில் – பார்வதி ...... வளர்த்தரு! ...... நீ ... நீ ... ஒரு வாக்கு ... கொடு.

மல்லி: என்ன வாக்கு வேணுமப்பா?

**பெரியவர் :** யார் கேட்டாலும் ...... என் குழந்தைன்னு...... சொல்லி ...... அதெ ...... காப்பாற்றுவேன்னு ...... வாக்குக்கொடு.

**மல்லி :** அப்படியே செய்கிறேனப்பா ! யார் கேட்டாலும் ...... "என் குழந்தை" என்று சொல்லி வளர்க்கிறேன்.

**பெரியவர் :** சரியம்மா ! நீ நன்ருய் வாழனும் ! ....... நெஞ்சை அடைக்குதே ! ஐயோ ! ......... ( உயிர் போகிறது — தலை சாய்கிறது )

**மல்லி :** ( அவர் மார்பில் தலை சாய்த்தபடி ) அப்பா ! அப்பா ! (என்று தேம்பி அழுகிருள். சரோஜா அவளைத் தேற்றுகிருள்.)

---

## காட்சி 79-ன் தொடர்ச்சி.

**சரோஜா :** நானும் மல்லிகாவும் அந்த விலாசத்திற்குப் போய் அந்தக் குழந்தையைக் கண்டுபிடித்துக் கொண்டு வந்தோம். தன் தந்தைக்குக் கொடுத்த வாக்கின்படி நடக்க வேணுமென்கிறதற்காகவே யார் கேட்டாலும் "என் குழந்தை" என்று சொல்லி வருகிருள் ! அவள் விதவையுமல்ல ! விபசாரியுமல்ல ! அந்தக் குழந்தை "கன்னியின் குழந்தை" யல்ல ! கன்னியின் தங்கை ! இவள் பரிசுத்தமான மனம் படைத்தவள். (எல்லோரும் ஆரவாரம் செய்து மகிழ்கிருர்கள். ராஜனின் தாயார் மல்லிகாவிடம் ஓடிச்சென்று அவள் கன்னங்களைத் தடவிக்கொடுத்துத் தன் கைகளை மடக்கித் தன் தலையின் இருபுறங்களிலும் அழுத்தி சொடுக்கு எடுக்கிருள். கமலா மல்லிகாவைக் கட்டியணைத்துக்கொள்கிருள். மற்ற பெண்கள் மல்லிகாவைச் சூழ்ந்துகொள்ளுகிருர்கள்.)

**ஒரு பெண் :** எல்லாரையும் ஏமாத்திட்டாளே !

**மற்ருெருத்தி :** அவ, தங்கக்கட்டியாட !

**சந்திரன் !** ( ராஜனின் தோள்மீது கைவைத்து ) ராஜு ! நீ அதிர்ஷ்டசாலியப்பா ! "நிர்மலா ! நிர்மலமானவளே ! (கோபால் பிள்ளை மல்லிகாவை நோக்கி வருகிருர், பெண்களை அகற்றி விட்டு மல்லிகா அவர் முன் வந்து தலைகுனிந்து கைகளைக் கூப்பி வணங்குகிருள்.

**மல்லிகா :** நான் என் இரகசியத்தை வெளிப்படுத்தாமல் இருந்ததற்கு மன்னிக்க வேண்டுகிறேன்.

**கோ. பிள்ளை :** நீ உன் தந்தைக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினுயம்மா ! உன்னைப் போன்ற பெண்ணைப் பெற்றவர் பாக்கியசாலியம்மா ! உன்னை என் மருமகளாகப் பெறு

வதற்கு நான் என்ன புண்ணியம் செய்து வைத்தேனே! அம்மா! உன்னுடைய பழைய பெயர்களெல்லாம், பழைய சம்பவங்களை நினைவு படுத்தும். இனிமேல் இந்த வீட்டுக்கு நீதான் "ராணி!" அதனால் உன் பெயர் "ராணி!" என்றே இருக்கட்டும்! என்ன?

**மல்லி :** ஆகட்டும் மாமா.

**கோ. பிள்ளை :** ராஜு! இங்கே வாப்பா! (மெய்மறந்து நின்றிருந்த ராஜு "ராணி"யின் பக்கத்தில் வந்து நிற்கிறான்.) இன்று முதல் என் மருமகளை எல்லோரும் "ராணி" என்றுதான் கூப்பிட வேண்டும்! தெரிகிறதா?

**ராஜன் :** சரி அப்பா!

**கோ. பிள்ளை :** நீங்கள் இருவரும் ராஜனும் ராணியும் போல அன்பாக வாழ்ந்து நன் மக்கள் பெற்றுப் புகழ் பெற்று வாழுங்கள்!

(இருவரும் அவருடைய பாதங்களைத் தொட்டுக் கும்பிடுகிறார்கள்)

## காட்சி - 84.

(திருமணச் சடங்கும் தாலி கட்டுதலும்.)

## காட்சி - 85.

[இடம் : நந்தவனம்:- (பாட்டு)

**ராணி :**
எங்கிருந்தோ வந்த வண்டு
என் அழகு மலர் கண்டு
இன்பமான தேனை உண்ணுதே-வெண்-நிலாவி-னிலே
இங்கு என்னை நாடி நண்ணுதே! ...... ஓ ......

**ராஜன்:**
குயில் போலக் கூவி நின்று
மயில் போல மங்கை ஒன்று
ஒயிலாக ஆடுகின்றதே – வெண்-நிலாவி-னிலே
உள்ளம் அதை நாடுகின்றதே!......ஆ......

(இருவர் முகங்களும் ஒன்று சேருகின்றன)

**ராஜன் :** என் ராணி நீ!

**ராணி :** என் ராஜன் நீர்!

(ஒரு வண்டு பறந்து வந்து ஒரு மலரின் மேல் அமர்ந்து தேனை உண்ணுகிறது)

முற்றும்.